# மாமுனிகள் வைபவம்

ஸ்ரீ உ. வே. ஸம்பத்குமாராசார்யர், பேராசிரியர், விவேகாநந்தர் கல்லூரி, மயிலை

நம்முடைய ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் பல ஆசார்யர்கள் விளங்கினு லும் மூவர் முக்யமாகக் கொள்ளப்படுகின் றனர்; அவர்களாகிருர் "ஆமுதல்வன்' என்னும்படி அவதார விசேஷமாயிருந் துள்ள வ்யக்தி விசேஷங்கள்—'முகில் வண்ணனடியை யடைந்துய்ந்த' நம்மாழ் வாரும், அந்த 'மாறனடிபணிந்துய்ந்த' நம்மிராமானுசனும், அவர் திருவடிகளிலே அநந்யசரணரான நம் மாமுனிகளும். அத ஞல்தான் ஸ்ரீவைஷ்ணவ உலகம் "ஆழ் வார் திருவடிகளே சரணம், எம்பெருமா ஞர் திருவடிகளே சரணம், ஜீயர் திருவடி களே சரணம்'' என்று நிச்சலும் அனுஸந் தித்து வருகிறது. நம்மாழ்வாருடைய பெருமையைக் காட்டிலும் எம்பெருமானு ருடைய பெருமை சிறந்தது. இவ்விருவ ருடைய பெருமைகளைக் காட்டிலும் மா முனிகளுடைய பெருமை மிகச் சிறந்தது ஆகும். எம்பெருமான் கைவிட்டவர்களை யும் திருத்தியவர் நம்மாழ்வார். ஓராண் வழியாகப் பூருவர்கள் உபதேசித்துப் போந்த நியமத்தைக் குலைத்துப் பலரை யும் உபதேசிக்கும்படி பண்ணி, பலகால் திருக்கோட்டியூர் நம்பி பக்கல் கேட்ட பரமார்த்தத்தை ஓலக்கமாக வைத்து உப தேசித்தவர் எம்பெருமானுர். பூர்வாசார்ய பரம்பராப்ராப்தமான அர்த்த விசேஷங் களை எல்லாரும் அறிந்து உஜ்ஜீவிக்க வேண்டும் என்று பரம காருணிகரான பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த மூன்று ரஹஸ்யங்களுக்கு மட்டும் தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகிய வ்யாக் யானங்களை அருளிச்செய்தவர் நம் மாமுனிகள். ஆதலால் தான் இவ்விருவர் பெருமையிலும் மாமுனிகளின் மேன்மை மேம்பட்டதாகும். மாமுனிகளிடத்தில் ஆசார்ய பதவியை அலங்கரிப்பதற்கு ஏற்ற நற்குணங்கள் அனைத்தும் குடிகொண் டிருந்தன என்ருல், இஃது இறையும் அதிசயோக்தி யாகாது.

இவர் ஆழ்வார் திருநகரியிலே திரு வவதரித்தார். இவருடைய திருத்தந்தை யார் திருநாவீறுடைய பிரான் தாஸர் அண்ணர். கலியுகத்தில் நாலாயிரத்து நூற்றெழுபத்திரண்டாவதாய், சக வரு ஷத்தில் ஆயிரத்து இரு நூற்றுத் தொண் ணூற்று இரண்டாவதான ஸாதாரண வருஷத்தில் ஐப்பசி மாதத்தில் இருபத் தாறுவது நாளில் சுக்லபக்ஷத்தில் வியாழக் கிழமை சதுர்த்தி கூடின மூல நக்ஷத்திரத் தில் அவதரித்தார்.

ப்ரதிவாதி பயங்கரம் அண்ணுவும், எறும்பியப்பாவும் இவ்விஷயத்தை "யத வரண மூலம் முக்தி மூலம் ப்ரஜாநாம் சடரிபு முநித்ருஷ்டாம்நாய ஸாம்ராஜ்ய மூலம் கலிகலுஷ ஸமூலோந்மூலநே மூல மிந்தே ஸ பவது வரயோகி நஸ்ஸமஸ்| தார்த்த மூலம்'' (ச்லோகம் 2) என்றும்,

"யந்மூலமாச்வயுஜமாஸ்யவதார மூலம்
காந்தோபயந்த்ரு யமிந: கருணைக ஸிந்தோ:
ஆஸீத ஸத்ஸ¬ குணிதஸ்ய மமாபிஸத்தா
மூலம் ததேவ ஜகதப்யுதயைக மூலம்''

(ச்லோ. 100) என்றும் தாம்தாம் அருளிய வரவரமுநி சதகம் தன்னில் அருளிச் செய்தார்கள்.

இவர் ஆதிசேஷனுடைய அம்சமாக வும் எம்பெருமானுருடைய அபராவதார மாகவும் அவதரித்தவர் என்னுமதை

அப்பிள்ளார் "ஆதியிலே யரவரசை யழைத்தரங்கர் அவனியிலே யிருநூறுண் டிருநீரென்ன, பாதியிலே உடையவராய் வந்து தோன்றிப் பரமபதம் நாடியவர் போவே னென்ன, நீதியாய் முன்போல நிற்க நாடி நிலுவைதனை நிறைவேற்றி வாருமென்னச் சாதாரண மெனுமாம் வருடந்தன்னில் தனித்துலா மூலநாள் தான் வந்தாரே" என்று அருளிச்செய் கிறார். மைசூர் அனந்தாழ்வான் ஸ்வாமி யும்.

"சேஷ: ஸ்ரீமாந் நிகம மகுடயுக்ம ரக்ஷாப்
ரவ்ருத்த:
ஸ்ரீமத் ராமாவரஜ முநிதாம் ஸௌம்ய
ஜாமாத்ருதாஞ்ச
விந்தந் த்ருப்யத் விமதபடலீ பாடநோத்
தாம ஸூக்தி:
பூயாத் பவ்ய ப்ரதித மஹிமா ச்ரேயஸே
பூயஸேந:
என்று அருளிச்செய்தது காணவேணும்.

இவருக்குப் பெற்றோர்களிட்ட திரு நாமம் அழகிய மணவாளன் என்பதாகும். இவர் 'திருவாய்மொழிப்பிள்ளை' திருவடி களிலே ஆச்ரயித்து "தேவுமற்றறியேன்" என்னும்படி இருந்து அவருபதேசத்தாலே திருவாய்மொழி தொடக்கமான எல்லா திவ்ய ப்ரபந்தங்களினுடையவும் அவற் றின் தாத்பர்யமான எல்லா ரஹஸ்யங் களினுடையவும் அர்த்தத்தைக் கற்றார். "நம்முடைய குரு பரம்பரையாகிற ஹாரத் துக்கு நடுநாயக ரத்னம்போல் விளங்கும் உடையவர் திருவடிகளையே உமக்குத் துணையாகப் பெற்றிடும்" என்று பிள்ளை காட்டிக்கொடுக்க, மாமுனிகளும் உடைய வர் திருவடிகளிலே அதிப்ராவண்யத்தை யுடையவரா யிருந்தபடியால் "யதீந்த்ர ப்ரவணர்" என்னும் திருநாமத்தைப் பெற்றார்.

நம்முடைய பூர்வாசார்யர்கள் அனை வரும் "தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்கம்" திருப்பதியையே இருப்பிடமாகக் கொண்டு தர்சந நிர் வாஹம் பண்ணிப் போந்தவர்களாதலால் இவரும் அங்கே எழுந்தருளி அழகிய மண வாளனுடைய பரம க்ருபைக்குப் பாத்ர மானார். ப்ரதமாசார்யரான பெரிய பெரு மாள் சரமாசார்யரான பெரிய ஜீயரை ஆசார்யனாகக் கொண்ட பெருமை மற்ற ஆசார்யர்களுக்கு இல்லாததொன்றாகும். ஆசார்யத்வ பூர்த்தி இவரிடத்தில் இருந் தமையால் தான் இவரை ஆசார்யனாகக் கருதினான் பெரிய பெருமாள். இவ்விஷயத் தைச் சற்று விவரிக்கிறேன்.

சாஸ்திரங்களில் ஆசார்ய லக்ஷணம் இவ்விதம் கூறப்பட்டிருக்கிறது. "ஆசி னோதி ஹி சாஸ்த்ரார்த்தாந் ஆசாரே ஸ்தாபயித்யபி, ஸ்வயம் ஆசரதேயஸ்து ஆசார்யஸ்ஸோபிதீயதே" என்ற ப்ரமா ணத்தின்படி ஞானம் அனுட்டானம் இவை இருக்கவேண்டும்; வாக்வன்மை இருக்கவேண்டும். இவைதான் ஆசார்ய னுக்கு லக்ஷணம். ஸ்ரீவசனபூஷணத்தில் ஆசார்யனுக்கு இந்த சாஸ்த்ர மர்யாதை யிலே லக்ஷணம் சொல்லப்பட்டிருப்பினும் தனியாக ஒரு லக்ஷணத்தைப் பரம காருணி கரான பிள்ளைலோகாசாரியர் ஒரு ஸூத் ரத்தில் தெரிவிக்கிறார்: "நேரே ஆசார்யன் என்பது ஸம்ஸார நிவர்த்தகமான பெரிய திருமந்த்ரத்தை உபதேசித்தவனை" என் பது 315-வது ஸூத்ரம். பகவந் மந்த்ரங் கள் அநேகம். எப்படி பகவானுடைய குணங்கள் எண்ணிறந்தவையோ பெயர்கள் எண்ணிறந்தவையோ அப் படியே மந்த்ரங்களும் எண்ணிறந்தவை. மற்றை மந்திரங்கள் ஸம்ஸாரத்தைத் தாண்டச் செய்யாதவை. ஸம்ஸாரத்தை வளர்க்க உதவி செய்பவை. அவை பெருமையற்றவையாயும் க்ஷுத்ரங்களு மாயு மிருக்கும். இந்த மந்த்ரங்களை உப தேசித்தவனுக்கு ஆசார்யத்வ பூர்த்தி கிடையாது. ஆசார்யன் யார் என்றால்

ஸம்ஸார நிவர்த்தகமான பெரிய திருமந்த்ரத்தை உபதேசித்தவனைத்தான். மந்த்ரம் என்னுமலும், திருமந்த்ரம் என்னுமலும், பெரிய திருமந்த்ரம் என்கை, எல்லாப் பயன்களையும் இம்மந்திரம் கொடுத்தாலும் மற்றைப் பலன்களில் நோக்கு இல்லாமல் மோக்ஷமாகிற பலத்திலே நோக்குடையதாயிருக்கும். வேதாந்தங்கள் எல்லாவற்றினுடைய கருத்துப் பொருள்: பிறவிப் பெருங்கடலைக் கடக்கச் செய்வது. மீண்டும் பிறப்பதற்கு விரும்பாத மக்களுக்குப் புகலிடம் இந்தப் பெரிய திருமந்த்ரம். ஆதலால்தான் இந்த மூலமந்த்ரமானது "மந்த்ராணும பரமோ மந்த்ர: குஹ்யா நாம் குஹ்யமுத்தமம்| பவித்ரம்ச பவித்ராணும் மூலமந்த்ரஸ்ஸநாதந:||" என்றது பாஞ்சராத்ரம். இம்மந்த்ரத்தை உபதேசித்தவனைத்தான் ஆசார்யன் என்று சொல்லவேணும்.

பெரிய திருமந்த்ரத்தை உபதேசிப்பதோடு மட்டுமன்றி அதன் விவரணமான த்வயம் சரமச்லோகம் இவற்றையும் உபதேசித்தவன் ஆசார்யனுவன். திருமந்த்ரத்தின் நடுப்பதமான 'நம: என்பதன் விவரணம் த்வயத்தின் பூர்வவாக்யம். திருமந்த்ரத்தின் கடைசிப் பதமான "நாராயணுய" என்பதன் விவரணம் த்வயத்தின் உத்தரவாக்யம். சரமச்லோகத்தின் பூர்வார்த்தம் த்வயத்தின் முன் வாக்கியத்தின் விவரணம். சரமச்லோகத்தின் பின்பாதி த்வயத்தின் உத்தரார்த்த விவரணம். ஆக த்வயம், சரமச்லோகம் என்ற மற்ற இரண்டு ரஹஸ்யங்களும் ப்ரதம ரஹஸ்யமான திருமந்த்ரத்தோடு வேருக இல்லாதிருத்தலால் திருமந்த்ரத்தைச் சொல்லவே மற்றவற்றின் உபதேசமும் தன்னடையே சொல்லியதாகத் தேறும். இதனைத் திருவுள்ளம் பற்றித்தான் பெரிய திருமந்திரத்தை உபதேசித்தவனை என்ருர் பிள்ளைலோகாசார்யர். ஆகையால் இது ரஹஸ்ய த்ரய உபதேசத்துக்கும் உபலக்ஷணம்.

திவ்ய ப்ரபந்தங்கள் எல்லாமே அதன் விவரணம்தான். ஆழ்வார்களில் தலைவரான நம்மாழ்வார் அருளிச்செய்த ப்ரபந்தங்கள் நான்கு. அவற்றில் சரம ப்ரபந்தம் திருவாய்மொழி. அது த்வயத்தின் விவரணம். "த்வயார்த்தம் தீர்க்க சரணுகதி என்கிறது ஸாரஸங்க்ரஹத்திலே" என்கிருர் பிள்ளைலோகாசார்யர். திருவாய்மொழிக்கு ஒப்பானதாய் வேறென்று ஒப்பில்லாததான வ்யாக்யானமான ஈட்டை மாமுனிகளைக்கொண்டு ஓதிப் பெருமாள் திருச்செவிசாத்தினுன். இத் திருவாய்மொழியின் அர்த்தத்தைப் பெரிய பெருமாள் மாமுனிகளிடத்து மட்டும் கேட்கக் காரணம் அவர் தம்மை நீசனுகச் சொல்விக் கொண்டபடியால்தான். பின்னும் "பிறர் மினுக்கம் பொருமையில்லாப் பெருமையும் பெற்றேமே" என்று தம்மைத் தாமே கூறிக்கொண்டார். இது அவருடைய விபவ தசையில்; அர்ச்சையிலும் அப்படியே. அவருடைய (திருவுருவம்) அர்ச்சா விக்ரஹம் ஆழ்வார் திருநகரியில், நின்ற திருக்கோலத்தோடும், திருவரங்கத்தில் வீற்றிருந்த திருக்கோலத்தோடும் நம் போன்றவர்களால் ஸேவிக்கப்படுகின்றன. "ஆழ்வாரைக் காட்டிலும் நமக்கு என்ன சிறப்பு, ஏற்றம்" என்று எண்ணித் தம்முடைய விக்ரஹத்தைச் சிறிதாக்கிக் கொண்டார் ஆழ்வார் திருநகரியில்; திருவரங்கத்திலோ "எம்பெருமானுர் நல்லாட்சி செய்து பெருமைப்பட்டவர். அவரைக் காட்டிலும் நமக்கு என்ன பெருமை" என்று எண்ணி, அடியார்கள் ப்ரார்த்தனைப்படி, பெரிய திருவுருவம் ஏறியருளப் பண்ணக்கூடாது என்று சிறிதாக்கிக் கொண்டார். "ஆழ்வாரே தம்மை நீசனுகச் சொல்லிக் கொண்டாரே! ("நீசனேன் நிறைவு ஒன்றுமிலேன்") ஆகையால் நாம்

எம்மாத்திரம்'' என்று தம்மை நீசனாகச் சொல்லிக்கொண்டபடியால்தான் பெரிய பெருமாள் இவரை ஆசார்யனாக வரித்தான். த்வய விவரணமான திருவாய்மொழியின் வ்யாக்யானங்களை ஆறுயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி, இருபத்துநாலாயிரப்படி, முப்பத்தாறுயிரப்படி இவற்றுடன் விசதமாக உபந்யஸித்தார். அதுகேட்டு எம்பெருமானும் இவருடைய வாக்வைபவத்தைக் கொண்டாடி இவருக்குத் தலையான ஸ்ரீசைலேசதனியனை ஸமர்ப்பித்தான்.

ராமாவதார காலத்தில் ராமனாகிய பெருமாள் திருவடியின் (ஹநுமானின்) வாக்வைபவத்தைக் கொண்டாடினான் "நாந்ருக்வேத விநீதஸ்ய நாயஜுர்வேத தாரிண: நாஸாமவேதவிதுஷ: சக்யமேவம் ப்ரபாஷிதும்'' என்று வால்மிகி கூறுகிறார். கம்பரும்

> இல்லாத உலகத்து எங்கும் இங்கு
> இவன் இசைகள் கூரக்
> கல்லாத கலையும் வேதக்கடலுமே
> என்னும் காட்சி
> சொல்லாலே தோன்றிற் றன்றே
> ஆர்கொலிச் சொல்லின் செல்வன்,
> வில்லார் தோள் இளையவீர! விரிஞ்
> சனோ! விடைவலானே!

என்று பாசுரம் பாடினார்.

எப்படிப் பெருமாள் திருவடியினுடைய வாக் வைபவத்தைக் கொண்டாடினாரோ அதுபோலவே ஆசார்யச்ரேஷ்டரான மாமுனிகளின் வாக் வைபவத்தைக் கேட்டுப் பெருமாளுக்கும் பெருமாளான பெரிய பெருமாள் கொண்டாடி விசதவாக் சிகாமணி என்ற பிருதையும் ஸன்மானித்தான்.

ஒவ்வொருவரும் தம்முடைய பெருமையைச் சொல்லிக் கொள்வதுபோல நம் மாமுனிகளும் தம்முடைய பெருமையை ஆர்த்தி ப்ரபந்தத்தில் ஒரு பாசுரத்தில் அருளிச்செய்கிறார் :

> தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப்
> பெற்றோம்
> திருவரங்கம் திருப்பதியே யிருப்பாகப்
> பெற்றோம்
> மன்னியசீர் மாறன்கலை உணவாகப்
> பெற்றோம்
> மதுரகவி சொற்படியே நிலையாகப்
> பெற்றோம்
> முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப்
> பெற்றோம்
> முழுதுமவை நமக்குப் பொழுது
> போக்காகப் பெற்றோம்
> பின்னையொன்றுதனில் நெஞ்சு பேராமற்
> பெற்றோம்
> பிறர் மினுக்கம் பொறாமையில்லாப்
> பெருமையும் பெற்றோமே.

இப்பாசுரத்தை ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனும் தினமும் அநுஸந்திக்க வேண்டும்.

மாமுனிகள் சிஷ்யர்கள் "அஷ்டதிக்கஜங்கள்'' எண்மர் :

(1) வானமாமலை ஜீயர்
(2) பட்டர்பிரான் ஜீயர்
(3) திருவேங்கட ராமானுஜ ஜீயர்
(4) கோயில் அண்ணன்
(5) ப்ரதிவாதிபயங்கரம் அண்ணன்
(6) எறும்பியப்பா
(7) அப்பிள்ளை
(8) அப்பிள்ளார்



இவர்கள் தவிர அநேக சிஷ்யர்களும் உண்டு.

**மாமுனிகள் அருளிச்செய்த க்ரந்தங்கள்:—**

ஸ்ரீ வசன பூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி, ஆசார்ய ஹ்ருதயம்— இவற்றிக்கு வ்யாக்யானம்,

பெரியாழ்வார் திருமொழிக்கு லோபம் அடைந்த பகுதி மாத்திரம் உரை,

ராமாநுஜ நூற்றந்தாதி உரை,
திருவாய்மொழி நூற்றந்தாதி,
உபதேசரத்தினமாலை,
ஆர்த்தி ப்ரபந்தம்,
யதிராஜ விம்சதி
தேவராஜமங்களம்.

> "அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ
> சடகோபன் தண்டமிழ் நூல் வாழ—கடல்
> சூழ்ந்த
> மன்னுலகம் வாழ—மணவாள மாமுனியே
> இன்னமொரு நூற்றாண் டிரும்.''

# திருவல்லிக்கேணிப் பதிகாநுபவம்

ஸ்ரீ உ. வே. கிருஷ்ண ஸ்வாமி அய்யங்கார், M.A., B.L,
[ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்ஸனம் ஆசிரியர், 3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17]

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த பெரிய திருமொழி இரண்டாம்பத்து மூன்றும் திருமொழி, திருவல்லிக்கேணிப் பதிகமாகும். "விற்பெருவிழவும்" தொடங்கி "சுகமினிதாள்வர்வானுலகே" என்று முடிவாகப் பத்துப் பாசுரங்கள் கொண்டது இப்பதிகம். தொண்டைமான் சக்கரவர்த்தி இருந்து அரசாண்ட மயிலாப்பூர் என்னும் படைவீட்டின்—இராசதானியின்—ஒரு பகுதி திருவல்லிக் கேணி. எப்போதும் குளிர்ந்துள்ள சோலைகள் சூழ்ந்தது இப்பகுதி. பகவதாஜ்ஞைக்குப் பயந்து சமயத்தில் உதிக்கும் சூர்யனின் வெயில் உட்புகாதபடி குரவம்-குரா முதலான மரங்கள் செறிந்துள்ள சோலைகளில் அம்மரங்களின் பூக்கள் மணம் கமழ வண்டுகள் பூக்களில் தேனைப் பருகி இன்பமிகுதியால் ரீங்காரம் பண்ண, குயில்கள் பாட, மயில்கள் ஆடுகின்றன. சோலைகளில் வாவிகள்—பெரிய துரவுகளான நீர்நிலைகள் உள்ளன. படைவீட்டுக்கு அகழிசூழ்ந்த மதில்களும் படைவீட்டுக்குள், தேராரும் நெடுவீதிகளில் இருபுறமும் மாடமாளிகைகளும் மண்டபங்களும் வரிசையாக அமைந்துள்ளன. மாளிகை மாடங்களில் மாதர்கள் களித்து விளையாடுகின்றனர். பெண்கள் பிராட்டியின் விபூதிகள்—பரிகரமானவர்கள். "ஒருவல்லித் தாமரையாள் சென்று ஒன்றிய சீர் மார்வன் திருவல்லிக்கேணியான்" என்றபடி பிராட்டி ப்ராதான்யமே மிக்கது இத்திருவல்லிக்கேணி திருப்பதி.

இப்பதிகத்திற்குக் கீழ்ப் பதிகத்தில் திருவெவ்வுளில் கிடந்தானை வீரராகவனை அநுபவித்தார். அவ்வெம்பெருமான் ஸ்ரீவைஷ்ணவர்கள் புஷ்பமாலைகள் கொண்டு பூஜித்து ஸ்தோத்ரம்பண்ணலாம்படி ஸுலபன். அவன் திர்யக்கான ஸ்ரீ கஜேந்த்ரனும் மலர்கொண்டு ஏத்தும் படியான ஸௌலப்ய ஸௌசீல்யாதி குணங்களையெல்லாம் திருவல்லிக்கேணி நின்றானிடம் நன்றாக அனுபவிக்கலாம்படி காட்டிக்கொடுக்க, ஆழ்வார் திருவல்லிக் கேணியில் எம்பெருமானை அக்குணங்களோடு கண்டு அநுபவித்து அவ்வநுபவத்தை "திருவல்லிக்கேணிக் கண்டேனே" என்று இப்பதிகத்தால் வெளியிடுகிறார். கீழ் சிங்கவேள் குன்றத்தில் அஹோபிலத்தில் வீற்றிருக்கும் நரசிம்மனை அநுபவித்த அநுபவமும், திருவேங்கட மலையில் நிலையார நின்று சரண்யனாய் ஸ்ரீமானான எம்பெருமானை அநுபவித்த அநுபவமும் அங்கேயே திண்கைமா துயர் தீர்க்கப் புள்ளூர்ந்து வந்துதவினதை அநுபவித்த அநுபவமும் தனித்தனியாக அமைந்தது ஆழ்வாருக்கு. ஒரு காலத்தில் தேனையும், பாலையும், கன்னலையும், அமுதையும் ஒன்றாகச் சேர்த்துப் பருகினால் உண்டாகும் விலக்ஷண ரஸாநுபவம் போன்ற ஓர் அநுபவம் திருவல்லிக்கேணியில் ஆழ்வாருக்கு அமைந்தது. திருவல்லிக்கேணியில் ஐந்து திவ்ய தேசம் என்ற வழக்குள்ளது.

கீழ்ப்பதிகத்தில் முதல் பாசுரத்தில் ராமாவதாரத்தை முதலில் அநுபவித்து பின்பு க்ருஷ்ணாவதாரத்தை அநுபவித்தார். இப்பதிகத்தின் முதல் பாசுரத்தில் க்ருஷ்ணாவதாரத்தை முதலில் அநுப

வித்துப் பின்பு ராமாவதாரத்தை அநுப விக்கிறார். கண்ணனது ஒரேவொரு லீலா வ்யாபாரத்தில் விற்பெருவிழவும், கம்ஸ னும் மல்லர்களும் யானையும் யானைப்பாக னும் எல்லாம் உயிரற்று வீழ்ந்தன. "முப்புரம் எரித்தவன்" என்று தன்னைத் தானே மதித்திருந்த ருத்ரனின்—தன் பிதாவான பிரமனின் தலையை யறுத்தத னால் ஆன மஹாபாதகத்தைப் போக்கித் தானே ஸர்வரக்ஷகன் என்பதை ப்ரகாசிப் பித்தான் திருவல்லிக்கேணியான். அவனே ஸ்ரீய: பதி: தேவன். குதிரைகளைக் கடத் தும் கோலைக் கையில்கொண்டு தன்னை ஆச்ரயித்த பாண்டவர்களின் விரோதி களாகையால் தனக்கு விரோதிகளான துர்யோதனாதியரை அழித்துத் தனது ஆச்ரித பக்ஷபாதம் தோன்ற நிற்கிறவன் பார்த்தஸாரதி—ஸ்ரீ கீதாசார்யன். அவனே முன் அவதாரத்தில் சிறிய தாயான கைகேயி சொல்லால் முடிதுறந்து காடே றப்போனான். ஆச்ரிதர்களான பாண்ட வர்களுக்காகத் தன் ஸர்வேச்வரத்வத்தை அழிய மாறி ஸாரத்யம் செய்தான். கூனி யின் போதனையால் கலங்கின கைகேயி ஸ்ரீராமனிடம் தனது பேரன்பை மறந்து போலியான அன்பு காட்டினாள். அவள் சொல்லையும் கேட்டு ந்யாயப்ராப்தமான முடியைத் துறந்து காடேறப்போனான். இதல்லவோ ஸௌசீல்ய குணம் என்று ஈடுபடுகிறார் ஆழ்வார். (1)

ஆச்ரித பரதந்த்ரனானவனே, பரதத் வம் என்று இரண்டாம் பாட்டில் அநு பவிக்கிறார். "வேதைச்ச ஸர்வை ரஹமேவ வேத்ய: (கீதை) [எல்லா வேதங்களா லும் அறியப்படுபவன் நானே] என்று ஸகல வேத ப்ரதிபாத்யனான எம்பெரு மான் கண்ணன். அந்த வேதவிஹித கர்மபலன்களை அந்தந்த அதிகாரிகளின் ருச்யானுகுணமாகத் தருகிறவன். ப்ரஹ்ம பாவனையேயுடையவர்களான, ஸாத்விகர் களுக்கும், பொதுவாக முமுக்ஷுக்கள் அனைவருக்கும்—காரணம் துத்யேய: (அதர்வசிஸ்) காரணப் பொருளே த்யா னம் பண்ணத்தக்கது) என்று—த்யான விஷயமாய் ஜகத்காரணனான எம்பெரு மான் நந்தகோபன் குமரனாய் அவதரித்த வன். அவனே உபாயோபேயமானவன் இதை எனக்குக்காட்டி என்னை ஆட்படுத் திக்கொண்டவன் ஸ்ரீ கீதாசார்யன். (2)

கண்ணனாய் அவதரித்தபோது முதன் முதலில் ஏற்பட்ட ஆபத்தைப் போக்கிக் கொண்டு தன்னை நமக்குத் தந்து நோக் கினவன் என்று பூதநா ஸம்ஹார சரி தத்தை அநுபவிக்கிறார் மூன்றாம் பாசுரத் தில். பேயான தனக்குப் பொருந்தாத, தாய் வடிவோடு வந்து உலகுக்கே ஆருயி ரான கண்ணனை அழிக்க வந்தாள் பூதனை. புருஷோத்தமனான தனக்குப் பொருந்தாத பெண்ணுருவாகி ப்ரயோஜனாந்தரபரர் களான தேவர்களுக்கு உயிர்கொடுக்கும் அமுதத்தைத் தந்தான், பெருமான்: எம் பெருமானது இவ்விரு செயல்களையும் கண்டு வித்யாதரர் முதலானோர் ஸ்தோத் ரம் பண்ணினார்கள். இப்படி அசுரர் வெங்கூற்றமாய் வானவர்தம் இன்னுயி ராய் விளங்குமவனான எம்பெருமானைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே என்று அநுபவித்தார். (3)

படாதனபட்டு அமுதம் தந்த எம் பெருமானிடம் நன்றி பாராட்டாது பசிக் கோபத்தால் அவனோடேயே எதிர்த்த தேவேந்திரனின் கர்வத்தைப் போக்கின எம்பெருமானின் கோவர்த்தனோத்தரண சரிதத்தை அநுபவிக்கிறார் நான்காம் பாசுரத்தில். கண்ணன் சொல்வதை அப்படியே நடத்திப்போருமவர்கள் ஆயர் கள். அதற்குமேல் ஒன்றும் அறியாத வர்கள். ஆண்டுக்கொருதடவை மழைக் காகத் தேவேந்திரனுக்குப் பூசை செய்

வதற்காகக் காரியங்கள் நடப்பதைக் கண்ட கண்ணன், "கண்முன்னே நிற்கிற இக் கோவர்த்தன மலையல்லவா பசுக்களுக்குப் புல்லும் தண்ணீரும் கொடுக்கிறது. இம் மலைக்குப் படையுங்கள். இது உங்கள் பூசையை அப்படியே ஏற்றுக்கொள்ளும் பாருங்கள்" என்றான். ஆயர்கள் அது சரியே என்று அப்படியே செய்தனர். ஸர்வாத்மாவான கண்ணன் கோவர்த்தன மாய் நின்று அனைத்தையும் கொண்டான். இந்திரன் பசிக்கோபத்தால் கடுமையான கல்மாரி பெய்விக்க கண்ணன் கோவர்த் தனத்தைக் குடையாகப் பிடித்து ஆயரை யும் ஆநிரையையும் காப்பாற்றினான். பசுவின் ரக்ஷகர்களான கோபர்களோடு வாசியில்லாமல் எல்லாவற்றையும் ரக்ஷிப் பவன் எம்பெருமானே. எல்லாம் அவ னுக்கு ரக்ஷ்யங்களே. எம்பெருமான் மழை யைத் தடுத்து ரக்ஷித்ததின் பொருள்: மெய்யடியார்களே! எப்பொழுதும் துன்ப மாரியைப் பெய்விக்கும் ஸம்ஸாரத்தைத் தடுத்து ரக்ஷிப்பவன் நானே எனப் படுவதேயாம். (4)



முதற் பாசுரத்தில் "பார்த்தன் தன் தேர்முன் நின்றானை" என்று பார்த்த சாரதியான தன்மையை அநுபவித்தார். இவ்வைந்தாம் பாசுரத்தில் அதற்கு முந் தினதான பாண்டவ தூதனைச் சென்ற சரிதத்தை அநுபவிக்கிறார். ஸ்ரீபூமி நீளா நாயகனான கண்ணனே எல்லார்க்கும் வலிய துணையாவான். தன்னையே அண் டின பாண்டவர்க்காகத் தூது சென்று பாண்டவர்கள் சொல்லியதை அங்குச் சொல்லி, அவர்கள் சொல்லியதைப் பாண்டவர்களிடம் சொல்லி இப்படித் தூது நடந்தவன் ஆச்ரிதவத்ஸலனான கண்ணன். இதை ஆழ்வாருக்குக்காட்டி ஆழ்வாரைத் தனக்காக்கிக்கொண்டு அவர் குலத்துக்கெல்லாம் துணையாய் நிற்பவன் ஸ்ரீகீதாசார்யன் ஒருவனே. உலகில் ஒரு வருக்கொருவர் துணை என்று துணை பலரைப் பற்றியிருக்கும். இங்கு அப்படி யன்று. ஏகநிஷ்டனே கண்ணனே துணை யாவான. (5)

கீழ்ப்பாசுரங்களில் அநுபவித்த பாண்டவ தௌத்ய ஸாரத்யங்களுக்குக் காரணமான த்ரௌபதி சரணாகதியை ஆறும் பாசுரத்தில் அநுபவிக்கிறார். மிக்க பெருஞ்சபை நடுவே, துச்சாதனன் த்ரௌ பதியை மானபங்கம் செய்ய முயன்ற போது த்ரௌபதி, "கோவிந்தா நீயே புகல் என்னை இவ்வாபத்திலிருந்து காப் பாற்று" எனக் கதறினாள். ஆபத்மிகுதி யாலே கோவிந்தநாமத்திலும் உபாய புத்தி வைத்தாளாகையாலே தூரத்திலிருந்தே கண்ணன் கோவிந்த நாமத்தின் பலனாய் புடவையை வளரச்செய்து த்ரௌபதி யின் மானத்தை ஸம்ரக்ஷித்துவிட்டான். பிள்ளையின் தவற்றைக்கண்டு திருத்த முடி யாதவாறு எல்லாவகையாலும் குருட னான தகப்பன், தமையனும் அரசர்க் கரசனாய், தம்பியை இஷ்டப்படி நடக்க விட்டுக்கண்டு உகப்பவன். ஆகவே துச்சா தனனுக்கு "பருவம், செல்வம், அதிகாரம், விவேகமில்லாமை" என்னும் அநர்த்த காரணம் நான்கும் பூரணமாக இருந்தது. த்ரௌபதியின் துன்பத்தைத் துர்யோ தனாதியரின் பெண்டிர்கள் நிரந்தரமாய்ப் பெறும்படி அவர்கள் திருமங்கல்யச் சரடு நீங்கவும் சரணாகதையான த்ரௌபதியின் கைப்பிடித்த பாக்யவான்களான பாண்ட வர்கள் ஸுகபோகமநுவிக்கும்படி த்ரௌ பதியின் கழுத்தில் மங்கல சூத்ரம் தங்க வும் அருள்செய்தான் சரண்யனான கண் ணன். ஆகவே பர்த்தாக்களான பாண்ட வர்கள் த்ரௌபதிக்கு ரக்ஷகர்களாக வில்லை. பிள்ளையான அர்ஜுனனுக்கு இந்திரன் ரக்ஷகனாகவில்லை. கண்ணனே ரக்ஷகனானான். சிலர் ஒருசமயம் எம்பா ரிடம் த்ரௌபதி பர்த்தாக்களை அழையா

மல் கோவிந்தனை அழைத்தது ஏன்? எனக் கேட்டனர். வஸிஷ்டரின் உபதேசப்படி த்ரௌபதி பெரும் ஆபத்து நேருங்கால் பகவானையே நினைக்கவேண்டும் என்று தேறிக் கோவிந்தனை அழைத்தாள் என்று எம்பார் பதில் கூறினர். இதையே மற்றொரு சமயம் சிலர் பட்டரிடம் கேட்க, பட்டர் "பர்த்தாவின் கைப்பிடித்துப் போகும்போதும், இடறி நோவுற்றால் உடனே "அம்மா" என்று அழைப்பது போலவே எல்லா உறவுமுறையான எம்பெருமானின் பெயரை அழைப்பது இயல்பேயல்லவா என்று பதில் கூறினர். இரு ஆசார்யர்களும் ஒவ்வொரு காரணத்தை விளக்கினர். இதில் முரண்பாடில்லை. (6)

முதற் பாசுரத்தில் "சிற்றவை பணியால் முடிதுறந்தானை என்று அநுபவித்த ராமாவதாரத்தை ஏழாம் பாசுரத்தில் விரிவாக அநுபவிக்கிறார். "பரதனும் தம்பி சத்ருக்கனனும்." என்பது ஒரு சேர்த்தி, 'இலக்குமனோடு மைதிலியும்' என்றொரு சேர்த்தி, பெருமாளைவிட்டுப் பிரியில் உயிர் வாழாதவர்கள் பிராட்டியும் இளையபெருமாளும், பெருமாளுக்கு இளையாழ்வார்போல், பரதனுக்கு சத்ருக்கனன் எல்லா வடிமைகளும் செய்து போந்தவன், பரதனைத்தவிர மற்றொன்றிலும் கண் வையாதவன், பாகவதாபிமான நிஷ்டன். இப்படி ராமாயண புருஷர்களின் சேர்த்தியைக் கண்டறிவாரும் கேட்டறிவாருமெல்லாம் இரவு பகலென்னுமல் எப்போதும் பெருமாளை ஏத்தா நிற்பார்கள். ஸம்ஸாரிகளான நாம் நம் காரியங்களெல்லாம் செய்து ஓய்ந்தபோது ஒருசமயம் ராமாயணாதிகளைக் கேட்டுத் துதியா நிற்போம். அறிவாளிகளான பெரியோர் எப்போதும் ராமாயணாதிகளையே அநுபவியா நிற்பார்கள். காலை சூது விஷயமான பாரதத்திலும், நடுப்பகலில் ஸ்த்ரீ விஷயமான ராமாயணத்திலும், இரவில் நவநீதசோரனை கண்ணன் விஷயமான ஸ்ரீமத் பாகவதத்திலும் பொழுதுபோக்குவார்கள். (7)

ராவணாந்தகனை ராகவ ஸிம்மத்தை அநுபவித்து அதற்குப் பூர்வஜன்மமாய் நரசிங்கமாய் ஹிரண்யாந்தகனவனை அநுபவிக்கிறார் எட்டாம் பாசுரத்தில். சிறுபிள்ளைப் பேச்சு இனியதாய்க் கேட்கக் கூடியதாய் இருக்கும். அதற்குமேல் தன் பிள்ளைப்பேச்சு தந்தையர்க்கு இனியதாய் இருக்கும். இவ்விரண்டும் ஹிரண்யனிடம் மாறுடிவிட்டது. பள்ளிச் சிறுவனை ப்ரஹ்லாதன் கூறினது திருவஷ்டாக்ஷரம் எனும் நாராயண நாமமேயாகிலும் ஆழ்வார் "ஆயிரநாமம்" என்று சிறுவன் ஒரு நாமம் பேசினதே ஆயிரநாமம் பேசினதாக ஈடுபடுகிறார். எல்லோருக்கும் நன்மை பயப்பதான திருமால் திருநாமத்தைக் கூறக் கேட்டதே காரணமாகத் தன் பிள்ளையைச் சிறினன் பிள்ளை என்று பாராமல். காலை ஒருதரம் தேவ, கிருஷ்ண, கோவிந்த என்று கூறினல் அவனுக்குப் பகலிலோ, மாலையிலோ, அல்லது இரவிலோ ஒரு வருத்தமும் உண்டாகாது. எப்போதும் இன்பமே என்ற சிறப்புமிக்க பகவன் நாமம் ஹிரண்யனுக்கு வருத்தம் தருவதாய் இருந்தது. காரணமின்றியே இருப்பதே காரணமாக பகவத் பாகவத விஷயத்தில் த்வேஷப்படுவதான அஸக்யாபசாரத்தால், பிள்ளையிடம் ஏற்பட்ட கோபத்தையெல்லாம் எதிரே நின்ற தூணின்மேல் காட்டி அதைக் காலால் உதைத்தான். அங்கப்போதே பிள்ளை வார்த்தை மெய்யாகும்படி அழகியான் தானே தெள்ளிய சிங்கமாய்த் தோன்றினன். எம்பெருமான் திருநாமத்தைச் சொன்னதே காரணமாக ஹிரண்யன் ப்ரஹ்லாதனைப் பிள்ளையாக எண்ணவில்லை. அதுவே காரணமாக ஆழ்வார் ப்ரஹ்லாதனைத் தன் பிள்ளையாகப் பாவித்துப் "பிள்ளையை" என்றார். (8)

சிறுவனை ப்ரஹ்லாதனுக்கு உதவினது மட்டுமல்லாமல் திர்யக்கான ஸ்ரீ கஜேந்திரனுக்கு உதவின மஹா குணத்தை அநுபவிக்கிறார் ஒன்பதாம் பாசுரத்தில், தன்னிடம் பேரன்பு பூண்ட காட்டிலே இஷ்டப்படி திரியும் மதயானை யான ஸ்ரீகஜேந்திரன் எம்பெருமான் திருவடிகளில் தாமரைப் புஷ்பத்தை ஸமர்ப்பிக்கவேண்டி தாமரை பூத்த பொய்கையில பூப்பறிக்க இறங்க அங்குள்ள திர்யக்கான நீர்ப்புழுவான முதலை அதன் காலைக் கவ்விக்கொண்டுவிட்டது. தன் சாப விமோசனத்தை நினைத்து முதலை தன் நிலமான பொய்கையில் வலிமிக்கதாயிற்று. ஆச்ரிதனை கஜேந்திரன் ஒரு நீர்ப்புழுவின் கையிலே அகப்பட்டதே என்று பதறித் திருவடியின் மேலேறி வேகமாக அரைகுலையத்தலை குலைய மடுவின் கரையில் வந்து யானைக்கு இடரின்றியே முதலைக்கு இடராம்படி திருவாழியை எறிந்தான். முதலைவாய்ப் பட்டுப் புண்ணான யானையின் காலைத் தடவிக்கொடுத்தான். அது பறித்திருந்த பூவைத் தன் திருவடிகளிலே சேர்த்துக் கொண்டான். அந்த கஜேந்திர வரதனைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே என்று தன் அநுபவத்தை வெளியிட்டார். (9)

இப்படித் தொண்டைமான் சக்ரவர்த்தியால் திருப்பணிகள் பல செய்யப்பெற்ற திருவல்லிக்கேணியில் பார்த்தசாரதியாய் ஸ்ரீகீதாசார்யனாக விளங்கும் எம்பெருமான் குணங்களை அநுபவித்து அவ்வநுபவத்தால் மிளிரும் ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயோடு விளங்கும் ஆழ்வார் அருளிச்செய்த இப்பத்துப் பாசுரத்தையும் பொருளுடன் எப்போதும் பேரன்போடு அநுசந்தானம் செய்யவல்லவர்கள். நித்ய சுகமான வானுலகு எய்துவர். இது பலச்ருதி. (10) கீழ்ப்பதிகத்தில் குறிப்பிட்ட "அண்டமாள்வதாணை அன்றேலாள்வர் அமருலகே" என்ற ஐச்வர்யபலமும் இங்கு அநுவர்த்திக்கிறது. இவ்வுலகில் பகவதாசார்ய கைங்கர்யத்துக்காக ஐச்வர்யமும் ப்ராப்யமே.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



———

# திருவொடு மருவிக் கடற்கரை உகந்தவன்

செந்தமிழ் வேதியர் ஸ்ரீ உ. வே. குமாரவாடி சே. இராமாநுஜாசாரியர்

மாலைவேளை; மக்கள் கடற்கரைக்குச் செல்கின்றனர்; வஸந்தத்தின் தூண்டுதலில் தென்றலும் சிறு துளியும் இன்ப நினைவூட்டுகின்றன. அந்தி நேரத்தின் வர்ண ஜாலங்கள் ஆங்காங்கே சிதறிக் கண்ணைக் கவருகின்றன! நீரும் நிலமும் சந்திக்கும் கடற்கரையில் அடிவானத்தின் தொடு விளிம்பின் அழகெல்லாம், கடலுக்கும் வானுக்குமிடை அலையெறிகின்றது. குறிப்பாக, திருவல்லிக்கேணி கடற்கரைக்கு (மரீனு) உலகப் புகழ் உண்டல்லவா? அத்தகைய படி கொண்ட கீர்த்திக்குள்ளே புதைந்து கிடைக்கும் ஒப்பற்ற மூர்த்தியின் உண்மைச் சிறப்பு ஒன்றை இக் கட்டுரையில் காணலாம்.

அளவற்ற அருட்செல்வம், பெறற்கரிய பெருஞ் செல்வம் ஆனுலும், காலடியில் கண்ணுக்குத் தெரியாமல் பூமிக்குள் புதைந்து கிடந்தால் என்ன பயன்? அதன் இருப்பு அறிந்து, சிறப்பையும் உணர்ந்து, பெற்று அனுபவித்தாலன்றே நாம் இன்புற இயலும்! திருவல்லிக்கேணில் புதையலை முதலில் கண்டு விண்டுரைத்த பெருமை மயிலைப்பேயாருக்கே சேரும்.

'முதலாழ்வார்கள்' என்று பொய்கை, பூதம், பேய் மூவரையும் ஒக்க எடுத்துக் கூறுவது ஸ்ரீ வைஷ்ணவ மரபு. நாலாயிர திவ்வியப் பிரபந்தத்துள் முதல் மூன்று திருவந்தாதிகளும், திருக்கோவலூர் இடைகழியில் இம் மூவர் மூலம் முறையே வெளி வந்தன.

'இவ்வுலகு அவ்வுலகு!' என வழங்கும் இரு வேறு உடைமைக்கும் நாதன் சுடராழியான் என்றுர் முதல்வர்; அவனது பெயர் நாராயணன் என்றுர் நடுவிலவர். அவனே திருவின் நாயகன் என்றுர் மூன்றுமவர்.

நாம் நமது அளவுடை ஐம்புலன்களால் காணும் புற உலக அறிவுக்கு, வையத்தையே தகளியாக்கி, வார்கடலை நெய்யாக்கி, கதிரவனையே விளக்காக வைத்துச் சிறப்புச் சேர்த்தார் பொய்கையார்.

அந்த ஞானத்தின் கனிவில் அகத்தில் எழும் அன்பையே அகலாக்கி, ஆர்வம். என்னும் நெய் பெய்து, இன்புருகு சிந்தையைத் திரிசமைத்து, ஆத்மாவின் உருக்கத்தை நெய்யாகவிட்டு, ஞானச்சுடர் விளக்கேற்றி விட்டார் பூதத்தார்.

புறமும் அகமும் ஒருங்கே ஒளிமயமாகத் திகழ, 'திருக்கண்டேன்; பொன் மேனிகண்டேன்' என்று பாடத்தொடங்குகிறுர் தமிழ்த்தலைவன் பேயார்.

மங்கல வாசகத் தொடராக முதல் மூன்று பாசுரங்களிலும் பேயாழ்வார் திருவுடன் மருவிய திருமேனி சேர்த்தியையே சுவையுடன் வெளியிடுகிறுர்.

நான்காம் பாசுரத்தில் உலகளந்த சேவடியை நினைவு கூர்ந்த ஆழ்வார் மீண்டும் அவன் திருமேனி அநுபவத்திலேயே இழிந்து, அடிவண்ணம், தாமரை என்றும், படிவண்ணம் கடல் நிற மென்றும், முடி வண்ணம்வெய்யோன் ஒளி என்றும்(செ:5) நிறங்களின் அழகைச் சுவைக்கிறுர். அவ் வழகில் எழுந்த அலைகளாகவே மேலும் சில பாசுரங்கள் செல்கின்றன. அழகுக்குத் தோற்று நாம் செய்ய வேண்டுவது, நாரணனின் பல்வேறு நாமங்களையும் சொல்லுவதே எனக்கூறி நம் அவயவங்

கள் பெறவேண்டிய பயன்களை எட்டு, ஒன்பது பத்து பாடல்களில்தொடர்கிறார்.

பதினோராம் பாசுரத்தில் தம் அனுபவத்தில் கண்டவன் வேறு யாருமில்லை, "நன் கோதும் நால் வேதத்துள்ளான் .... பயின்று உரைப்பார் நூற்கடலான், நுண் அறிவினன்," என்று கூறி, வேதாந்த விழுப்பொருள் அவனே என்கிறார்.

"சாஸ்த்ர யோநித்வாத்" என்பது வியாஸரின் பிரம்ம சூத்ரம்.

'உளன் சுடர் மிகுசுருதியுள்' என்பது வேதம் தமிழ் செய்த மாறன் மறை.

மறை நான்கும் ஓதி, அறிவுத்தாள் கொளுவி, ஐம்புலனும் தம்மில் செறிவு என்னும் திண்கதவம் செம்மி நன்குணர்வார், பைங்கோத வண்ணன் படி நாள் தோறும் காண்பர்—என்று மறைநூல் காட்டும் நெறியை உணர்த்துகிறார்.

'நெறிகாட்டி நீக்குதியோ' என்ற அச்சம் நேராமல் தன்பாதம் நீட்டி வையம் அளந்த, வேதமும் விதந்து கூறிய திரிவிக்கிரமனின் செயலை நினைவு கூர்ந்து, அவன் பாதம் பற்றி, மாற்பால் மனஞ் சுழித்தால், புன்புல ஆக்கையின்வழி உழல்வதை நீக்கலாம் என்றார்.

"பணிந்து உயர்ந்த பௌவப்படுதிரைகள் மோத ... அங்கு அனந்தன் அணைக் கிடக்கும் அம்மான்" தம் மனத்து வந்து அணைவதைத் தமது அனுபவ உண்மையாக வெளியிடுகிறார், ஆழ்வார்.

குறிப்பாக, திருவல்லிக்கேணிக் கடற்கரையில் அணைமேவிய மந்நாதனுக்குப் பொருந்தும் பாசுரமிது.

இப்பாசுரத்தில்"தன்னை வந்தடையும் அடியாரை எதிர்நோக்கி அணை கோலிக் கிடக்கும் அவனது எளிமையை" நினைவுறுத்தும் ஆழ்வார், அதனை அடுத்து நமக்குக் காட்டிக்கொடுக்கும் "வைத்த மாநிதி" யையும் காணலாம்.

**வந்துதைத்த வெண்திரைகள் செம்பவளம் வெண்முத்தம்**

**அந்தி விளக்கும் அணிவிளக்காம்-எந்தை**

**ஒருவல்லித் தாமரையாள் ஒன்றியசீர் மார்வன்**

**திருவல்லிக் கேணியான் சென்று.**

ஒரு அல்லித்தாமரையாள் சென்று ஒன்றிய சீர்மார்பனின் கடற்கரை சேர்த்தியின் சிறப்பையே நமக்கு ஆழ்வார் சேமவைப்பாக்குகிறார் !

அவனது வடிவழகில் மயங்கிய தாமரையாள் தான் பிறந்த மலரின் மென்மை, தண்மை (குளிர்ச்சி), நறுமணம், செவ்வி (நிறம்). ஒன்றையும் கணிசியாமல், அவன் மார்பையே விரும்பிச் சென்று ஒன்றினாள்.

பிராட்டி சேர்க்கையின் சீர்கண்டு அவ்விடம் விட்டுப் பெயரமாட்டாமல், அவளது வால்லப்யத்தில் (வடிவழகிலும், ஸ்பரிசத்திலும்) வளைப்புண்டு, ஓராயிரமாய் உலகேழ் அளிக்கும் பேராயிரம் கொண்டதோர் பீடு உடைமையும் மறந்து, 'திருவல்லிக்கேணியான்' என்பதே பெயராகச் சுழித்துக்கொண்டுவிட்டான் அப்பெருமான்-என்கிறார் பேயாழ்வார்.

கடல் கால் அலைப்ப நின்றவன், அம்மகிழ்ச்சியில் செம்பவளத்திரள் வாயனாகி, முத்தும் பவளமும், சீர்செய்து திருமகளைக் கடலரையன் கொடுத்தபோது. இருமருங்கும் கைகொடுத்துக் கடைந்த கடல்வண்ணனின் அகன்ற அழகிதான திருமார்பில் கண்வைத்தாள் ஸ்ரீதேவி விண்ணவர் அமுதுண, அமுதில் வரும் பெண் அமுதான பிராட்டி தேவர்களாகிய தன் குழந்தைகள் பார்த்துக்கொண்

டிருக்கும்போதே, நாயகனின் அகன்று விரிந்த எழில் மார்பையே உறைவாக்கிக் கொள்ள விரைந்து அதில் ஏறி அமர்ந் தாள்!

இதுகண்டு தேவர்கள் வாய்பிளந்து நின்றனர்! "பச்யதாம் ஸர்வ தேவாநாம் யயௌ வக்ஷஸ்தலம் ஹரே:" அப்போது' "தயா அவ லோகிதா தேவா:" என்று, இத்தேவதைகளின் அலமாப்பைப்பாராய் என்று எம்பெருமான், தன் திருவுளத் தாலே நினைந்தான்; அந்நினைவைப் பின் சென்று, தன் தாய்மைக்குச்சேரப் பிராட் டியும், அந்தத் தேவதைகளாகிற குழந்தை களைத் தன் கருணை நிறைந்த கண்களாலே நோக்கினாள்.

அண்ணலும் நினைந்தான்! அவளும் நோக்கினாள்! அதன் விளைவு இராமாவ தார காலத்தில், புறத்தே பிரிந்து இருந்த பிராட்டி, முடிவில் முடிசூட்டு விழாவில் சிம்மாசனத்தில் தன்னுடன்வந்து ஒன்றிய போது இந்திரன் கொடுத்த ஒரு முத்து மாலையைக் கையில் ஏந்தி, மாலையையும், பிராட்டியையும், மாறிமாறிப் பார்த்தான் சக்கரவர்த்தித் திருமகன்.

இங்கிதமறிந்த பிராட்டி அம்மாலை யைத் திருவடியைக் குளிர நோக்கிக் கொடுத்தாள்! நாடு புகழும் பரிசை அனுமன் பெற்றனன்.

அஃதேபோன்று கடற்கரை சேர்த்தி யில் பிராட்டியைக் கூடிய பெருமானின் முகமலர்த்தியில் அந்தி அழகின் சுவை யோடு திருவல்லிக்கேணியான் அருள்திறத் தையும், மணிநிறத்தையும் நாம் அனை வருமே சென்று பெறலாம், சுவைத்து மகிழலாம் என்கிறார் பேயாழ்வார்.

இதையடுத்த பாசுரம் அமையும் விதம் காணீர். இதுவரை நமக்குக் கழிந்த நாட்களும் நல்லவையே. எங்ஙனே எனில் இன்று நாம் வந்து அவனைக்கிட்டி மகிழும் வகையில். அவை கழிந்தவை ஆகிவிட்ட படியால், இனி நாம் 'செங்கண் மால் எங் கள் மால்!' என்ற நாள் நமக்கு எந்நாளும் நன்னாள்!

இறவாத எந்தை இணையடிக்கு ஆளாகி மறவாது வாழ்த்துக நம் வாய்.

சார்வு நமக்கு என்றும் சக்கரத்தான்,
தண்துழாய்த்
தார்வாழ்வரை மார்பன் தான்
முயங்கும்—கார்ஆர்ந்த
வானவரும் மின்இமைக்கும்
வண்தாமரை நெடுங்கண்
தேனமரும் பூமேல் திரு.

---

# வாளா கிடந்தருளும், வாய்திறவான்

ஸ்ரீ உ. வே. T. S. ராஜகோபால ஐயங்கார், B.A., L.T.
[கவிரத்ந-கண்டீரவ, செஞ்சொற்கவி, அபிநவ பட்டர்பிரான்]

திருமழிசைப் பிரான் திருவல்லிக்கேணியை மங்களாசாஸநம் செய்துள்ள பாசுரம்.

> தாளா லுலக மளந்தவசை வேகொல்
> வாளா கிடந்தருளும் வாய்திறவான்—
> நீளோதம்
> வந்தலைக்கும் மாமயிலை மாவல்லிக்
> கேணியான்
> ஐந்தலைவாய் நாகத் தணை.

[நீள் ஓதம் வந்து அலைக்கும் மாமயிலை மாவல்லிக்கேணியான், ஐந்தலைவாய் நாகத்து அணை (அணையில்) வாளா (அசையாமல்) கிடந்தருளும்; வாய் திறவான், (காரணம்) : தாளால் உலகம் அளந்த அசைவே கொல் (அசைவோ) ?]



பேயாழ்வார் திருக்கோவலூரிலே உலகளந்த நம்பியைக் கண்டு களித்து, "திருக் கண்டேன், பொன்மேனி கண்டேன்" என்று பாடினர். அந்தப் பெருமானது திருவடி நமக்கு "மருந்தும் பொருளும் அமுதமும் தானே" என்றும், அவனது திருமேனி நிறம் (படிவண்ணம்) பார்க்கடல் நீர்வண்ணம், அதாவது பாரைச் சூழ்ந்துள்ள கடலின் வண்ணம் என்றும், அவன் அண்டங்கடந்த நிலை அழகியது என்றும் அனுபவித்து, அப்பெருமானது திருவடிகளிலேயே தம் மனம் ஆழ்ந்து மயங்கிக்கிடக்கும் என்றுர்.

> அரும்பும்—புனந்துழாய் மாலையான்
> பொன்னங்கழற்கே
> மனம் துழாய் மாலாய் வரும்.

[துழாய்-ஆழ்ந்து, மாலாய்-மயங்கி].

இவ்வாறு தமது மனத்தில் ஆழ்ந்த பெருமானை வேளுக்கையிலும் வெஃகாவிலும் வணங்கினர். அன்று, நின்று இவ்வுலகம் அளந்த ஆயாசமோ இவன் வேளுக்கையில் இருப்பது (வீற்றிருப்பது) என்று பரிவுகொள்ளுகிருர். நின்றவன் வீற்றிருந்தான் ஆயாசத்தால், வீற்றிருந்தவன் வெஃகாவில் கிடந்தான், மிகுந்த ஆயாசம் தீருவதற்காக. ஆழ்வாரது பரிவு மேலும் ஓங்கியது. இப்பெருமானைத் தமது மனம் அநுஸந்திக்க வேண்டும் என்று விரும்புகிருர்.

> அன்றிவ் வுலக மளந்த வசைவேகொல்
> நின்றிருந்து வேளுக்கை நீணகர்வாய்—
> அன்று
> கிடந்தானைக் கேடில் சீரானை
> முன்கஞ்சைக்
> கடந்தானை நெஞ்சே காண்.

வேகவதிக்கரையில் ஆயாசந் தீருவதற்காகப் பெருமான் சயனித்திருப்பதைக் கண்டு பரிந்தார் பேயாழ்வார். இவரது சிஷ்யராகிய திருமழிசைப் பிரான் இவரைக் காட்டிலும் பரிந்து திருவல்லிக்கேணிக் கடற்கரையில் பெருமானது சயனக் கோலத்தை அநுபவிக்கிருர், "தாளால்" என்ற இப்பாசுரத்தில்.

"ஏரார் கோலந் திகழக் கிடந்தாய்", "கிடந்ததோர் கிடக்கை" என்று ஆழ்வார்கள் சயனத் திருக்கோலத்தைக் கண்டு களித்து மனம் உருகுவர். திருமழிசைப் பிரானுக்கு இந்தத் திருக்கோலத்தைக் கண்டதும் கனத்த பரிவு ஏற்பட்டது. ஆழ்வார் பெருமானது முன்னர் நெடுங்காலம் நின்ருர். அவன் "வாளா கிடந்தருளும்" — இடம் வலங்கொள்ளாமல்

கிடந்தருளுகிறான். "வாய் திறவான்" — "ஆழ்வீர் ! வந்தீரா" என்ற வார்த்தையும் சொல்லவில்லை. ஆதலால் ஆயாசம் பெரிதும் கொண்டான் இவன் என்று தேர்ந்து, இந்த ஆயாசத்திற்குக் காரணம் யாதென்று ஊகிக்கின்றார் ஆழ்வார்.

இந்திரன் இழந்த அதிகாரத்தை அவனுக்கு மீட்டுக்கொடுப்பதற்காகப் பெருமான் வானாட்டைவிட்டு; தன் உருவைக் குறுக்கிக்கொண்டு, மாவலியிடம் நடந்துசென்று, தனது காரியம் முடியுமோ என்ற பதற்றத்தோடே, "கொள்வன் நான் மாவலி மூவடிமண்", "என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடி மன்னா! தருக" என்று யாசித்துக் கையில் நீர் பாய்ந்ததும், விம்ம வளர்ந்து, ஒரு திருவடியால் இவ்வுலகை அளந்து அளவில்லாத களிப்பால் இவ்வாறு படாதன பட்டதால் ஆகும் இக்களைப்பு என்று கருதுகிறார் ஆழ்வார். மலர்மகளும் மண்மகளும் கூசிப் பிடிக்கும் மெல்லிய திருவடியைக் கல்லும் மலையும் அடர்ந்த பூமியிலே கூசாதுவைத்து அளந்ததாலன்றோ இக்களைப்பு என்பது ஆழ்வாரது ஊகம். திருவடி நோவுகின்றது என்று ஒரு வார்த்தை பணித்தால், ஆழ்வார் ஆயாசந் தீரத் திருவடிகளைத் தடவிக்கொடுப்பார் போலும்.

இந்தப் பெருங்களைப்புத் தீருவதற்காகச் சயனித்துள்ள இடம், "நீள் ஓதம் வந்து அலைக்கும் மாமயிலை மாவல்லிக்கேணி". வெஃகாவில் கிடந்தது ஆற்றங்கரை; இங்குக் கிடப்பது பெரிய அலைகள் கொண்ட கடற்கரை. பெரிய அலைகள் துடைதட்டி இவனை உறங்கச் செய்வன போலும், அலையின் திவலைகள் திருமேனியில் சேர்ந்து சோர்வை நீக்குவனபோலும்.

பெருமான் பள்ளிகொள்வது "ஐந்தலைவாய் நாகத்து அணை". பெருமானுக்கு என்ன நேருமோ என்று அஞ்சி, எதிரிகள் அணுகாவண்ணம் "விடம் காலும்" — விடத்தை உமிழ்வான் திருவனந்தாழ்வான். இந்த ஆதிசேஷன் காற்றும் வெய்யிலும் தாக்காதவாறு தன் வளைவாலே பெருமானைக் காத்துக்கொண்டிருக்கிறான்; ஐந்து திருமுகத்தாலே பரிவுடனே ஏத்துகிறான்; இவனது திருமேனி பெருமானின் ஆயாசத்தைத் தீர்ப்பதற்காகப் பரப்பு, மென்மை, குளிர்ச்சி, பரிமளம் இவை வாய்ந்தது என்று ஒருவாறு கவலை நீங்குகிறார், ஆழ்வார். இப்பெருமான் ஆழ்வாரது திருவுள்ளத்திற் புகுந்தான்; களிப்புற்ற ஆழ்வார் இப்பெருமானை நாம் குடந்தை, வெஃகா, திருவெவ்வுள், அரங்கம், திருப்பேர், திருவன்பில் ஆகிய திவ்ய தேசங்களிலே கண்டு வணங்கி உய்யக் கூடும் என்றருளிச்செய்கிறார்.

—————

# திரிந்துழலும்

ஸ்ரீ உ. வே. T. S. ராஜகோபால ஐயங்கார்,

[கவிரத்ந-கண்டீரவ, செஞ்சொற்கவி, அபிநவ பட்டர்பிரான்]

அழகிய மணவாளதாஸர் என்கிற திவ்யகவி பிள்ளைப்பெருமாளையங்கார் தமது "நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி" என்ற நூலில் திருவல்லிக்கேணியைப் பற்றி அருளிய வெண்பா:

திரிந்துழலுஞ் சிந்தைதனைச் செவ்வே நிறுத்திப்
புரிந்து புகல்மின், புகன்றால் — மருந்தாம்
கருவல்லிக் கேணியாம் மாக்கதிக்குக் கண்ணன்
திருவல்லிக் கேணியான் சீர்.

[புகல்மீன்-சொல்லுவீர்]

திருவல்லிக்கேணியில் உறையும் கண்ணனுடைய சீரை வாயார ஓதினால், அது பிறவிப் பிணிக்கு மருந்து, வைகுந்தத்திற்கு ஏறும் ஏணியுமாம் என்பது கருத்து.

திருவல்லிக்கேணியான் கண்ணன், பார்த்தன்தன் தேர் முன்நின்றவன், ஸ்ரீ கீதையை உபதேசித்து, "மாம் ஏகம் சரணம் வ்ரஜ; அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்று சரம உபாயத்தை வெளியிட்டவன்.

இவனைப் பற்றும்போது எவ்வாறு பற்றவேண்டும்? திரிந்து உழலும் சிந்தனையைச் செவ்வே நிறுத்தி. நம்மாழ்வார்

பிரிந்தொன்று நோக்காது தம்முடைய பின்னே
திரிந்துழலுஞ் சிந்தனையார் தம்மை

என்றருளியதைப் பின்பற்றியது இந்த முதலடி. நம்மைத் தவிர வேறொருவருமில்லை, என்ற அகங்கார மமகாரங்களால் சரீரங்கள் தோறும் புகுந்து வருந்துவதை அறவே ஒழிக்கலாகும், நமது சிந்தனையை நம் வசப்படுத்தினால். நமக்காக "எதிர் சூழல் புக்குத் திரியும்" பெருமானை நினைப்பதற்கானது நமது சிந்தனை. இவ்வாறு சிந்தனையைக் கட்டுப்படுத்தி, புரிவில், அதாவது அன்புடன் பெருமானின் சீரைப் புகலவேண்டும்.

இவ்வாறு புகல்வதால் விளைவு, நாம் நமது பிறவித் தொடரை அறுக்கலாம். பெருமானுடைய சீர் கருவல்லிக்கு மருந்து, ஓயாது கருப்பத்தில் தோன்றிப் படரும் பிறவிகளை ஒழிப்பதற்கான மருந்தாகும். அன்றி மா கதிக்கு ஏணி ஆம்— ஆனந்த மயமான ஸ்ரீ வைகுண்டத்திற்குச் செல்லப் பயன்படும் ஏணியாம்; நலமந்தமில்லதோர் நாட்டிற்கு நாம் படிப்படியாக எளிதில் ஏறலாம். சீரைப் புகன்றால், "மோக்ஷயிஷ்யாமி, மாசுச:" என்றவாறு வைகுந்த மாநகர் சேருவது எளிது. "பரித்யஜ்ய, வ்ரஜ" என்பது போலே, தீய சிந்தனையைக் கைவிட்டு, பெருமானுடைய சீரை ஓதுவது நாம் செய்யக்கூடியது. செங்கண்மால் "மருந்தும் பொருளும் அமுதும்" ஆவான்; அவன் சீரும் இவ் வண்ணமே.

———

# அல்லிக்கேணி நாயகன் கீதாசாரியன் ஏற்றம்

ஸ்ரீ உ. வே. வேங்கடகிருஷ்ண பட்டாசாரியார்,
(பெரியமுறை அர்ச்சகம், திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தானம்)

ஶ்ரிய: பதியாய் அவாப்த ஸமஸ்த காமனாய், ஸ்ரீ வைகுண்ட நிகேதநனாய், ஸ்ரீ பூமி நீளா தேவி ஸமேதனாய், அபார காருணிகனாய், நித்ய முக்தாநு பாவ்யனாய் எழுந்தருளியிருக்கும் ஸர்வேச்வரன் அர்ச்சாவதார மூர்த்தியாய் ஸ்ரீ ருக்மிணீ நாயகனாய் வேங்கடகிருஷ்ணன் என்னும் திருநாமம் கொண்டு திருவல்லிக்கேணி என்னும் இந்த க்ஷேத்திரத்தில் ஸ்ரீ பார்த்தஸாரதியாய் ஸேவை சாதிக்கின்றான். "ஒழிவில்கால மெல்லாம் . . . வழுவிலா வடிமை செய்து" என்கிறபடி கீதாசாரியன் திருவடிவாரத்தில் அருளிச்செயல் கைங்கர்ய பாக்யம் பெற்றுத் திருவல்லிக்கேணி வேத அத்யாபக கோஷ்டி பொலிவுடன் திகழ்கிறது. இவ்வாண்டு இச்சிறந்த கைங்கர்யத்தைக் கொண்டாடும் பெருவிழாவாக ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமி பிரம்மோத்ஸவத்தில் நிறைந்த விற்பன்னர்களைக்கொண்டு அருளிச்செயல் கோஷ்டி, வேத பாராயண கோஷ்டி கைங்கர்யத்தில் அன்வயித்து எம்பெருமானுக்கு உகப்பான உபசார கைங்கர்யங்களிலும் விமரிசையாக ஈடுபட்டது. இந்த விழாவின் அங்கமாக அனைத்து இல்லங்களிலும் பொக்கிஷம் போன்று விளங்கும் வண்ணம் சிறப்பான மலர் வெளியிட உள்ளது. அடியேனையும் ஒரு பொருட்டாக எண்ணி கோஷ்டியார் நியமனப்படி அடியேன், சிற்றறிவுக்குத் தெரிந்த அளவில் மஹநீயர்கள் ஆக்ஞையைக்கொண்டு விற்பன்னர்களின் சான்றினைக் கருத்தில் கொண்டு சில விஷயங்களை விண்ணப்பித்துக்கொள்கிறேன். குற்றம் நீக்கி குணத்தினைத் கொண்டு அனுக்ரஹிக்கப் பிரார்த்திக்கிறேன்-

எம்பெருமான் "பரத்வஞ்ச ததோ வ்யூஹம் விபவம் சாந்தராத்மகம்| அர்ச்சாவதாரம் சாஸ்த்ரானும் உத்பவம் மோக்ஷ லக்ஷணம்|| என்று கூறியுள்ளபடி பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாம்ய, அர்ச்சாவதார பேதமாக ஐந்து நிலைகளில் பேசப் படுகிறான். ஸ்ரீ வைகுண்டத்தில் நித்ய விபூதியில் நித்ய முக்தாநு பாவ்யனாய் ஆதிசேஷனை உறைவிடமாகக் கொண்டு ஸ்ரீ பூமி நீளாதேவி ஸஹிதனாய் அனந்த, கருட, விஷ்வக்ஸேனாதிகளுடன் ஸந்ததம் ஸாமகானம் செய்யப் படுபவனாக உள்ள பரத்வ நிலையும்; நித்யானந்தத்தில் இருந்தும் லீலாவிபூதி என்கிற லோக சம்ரக்ஷணத்தின் பொருட்டு தன்னுடைய ஞான விசேஷத்தினாலேயே ஸங்கல்பித்து நடத்தும் திறனிருந்தும் முக்தர்கள் போன்ற பிரம்ம புத்திரர்கள், ஸனத்குமாரர்கள் முதலானோர்களும், ச்வேதத்வீப வாஸிகளும் கண்டானந்திக்கும் வண்ணம் ஆர்த்த ரக்ஷணமாக க்ஷீராப்தியில் அனந்த சயனத்தில் எழுந்தருளியிருக்கும் தன்மையாகிய வ்யூஹ நிலையும் சேதனர்கள் அடைய முடியாதவைகளாகும். மஹநீயர்களுக்கும், சாதுக்களுக்கும் ஸேவை சாதிக்கும் நிமித்தமாக "மத்ஸ்ய, கூர்ம, வராஹ, நாரஸிம்ஹ, வாமன, பரசுராம, ராகவ, பலபத்ர, கிருஷ்ண, கல்கி" என தசாவதாரங்கள் கொண்டு தானே செய்து கொண்ட ஸங்கல்பத்தின்படி அந்தந்த யுக தர்மத்தை அனுசரித்து, தர்மவழி நடந்து காண்பித்து அதர்மத்தை அழித்து தர்மத்தை ஸ்தாபித்தருளிய அவதார பேதங்கள் கொண்ட விபவ நிலையும், அந்தந்தக் காலத்தில் உடனிருந்தவர்களுக்கு மட்டுமே பிராப்தமானதாகவும் நம்மால்

அனுபவிக்க இயலாததுமாகவும் உள்ளது. "அந்தர் பஹிச்சதத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித:" என்கிற பிரமாணப் படி பேதமின்றிக் காணும் பொருள் யாவி லும் ஸ்தூல ஸூக்ஷ்ம நிலையிலிருந்து நிறைந்து ஸனக, ஸனுதனாதிகளாலும் அறியப்படாத நிலை அந்தர்யாமித்வமாகும்.

ஸ்ரீமந் நாராயணன் திவ்ய மங்கள அப்ராக்ருத ஸ்வரூபத்தை சிலா, தாரு, பஞ்சலோகங்கள் கொண்டு செய்யப்பட்ட பிம்பங்களில் மஹரிஷிகள் நியமித்த பகவத் சாஸ்த்ர ஆகம விதிப்படி ஆவாஹனம் செய்து பிரதிஷ்டை செய்யப்பட்டுப் பக்த பராதீனனாக சேதனங்கள் உஜ்ஜீவிக்கும் வண்ணம் அனேக திருக்கோயில்களில் திவ்ய மங்கள ரூபியாய் எழுந்தருளியிருக் கும் நிலை அர்ச்சாவதாரம் எனப்படும். சேதனர்கள் உய்ய உபாயமாய் உபாய பரிக்ரஹம் பண்ணினால் சிலாக்கியமாக இருக்குமென நம் பூர்வர்கள் அருளிச் செய்துள்ளபடி நமக்குத் தஞ்சமாவது அர்ச்சாவதாரம் என்பது திண்ணம். எம் பெருமான் எழுந்தருளியிருக்கும் திருக் கோயில்கள் மஹரிஷிகளுக்கும், பக்தர் களுக்கும் பிரத்யக்ஷமாகி ஸேவை ஸாதித்த பெருமையினையும், அவர்களால் ஆராதனம் செய்யப்பட்ட பெருமையினையும், உடை யவை. ஸ்ரிய: பதியான ஸர்வேச்வரன் அர்ச்சாரூபியாய் எழுந்தருளியுள்ள திருக் கோயில்கள் "மயர்வற மதிநலம் அருளப் பெற்று", ஆழ்வார்களால் "பின்னானார் வணங்கும் சோதி" என்று கொண்டாடப் பட்டு அருளிச்செயல் ஏற்றம் பெற்று மங்களாசாஸனம் செய்யப்பட்டவை திவ்ய தேசங்கள் எனப்படும். இவைகளில் தொண்டை நாட்டுத் திருப்பதிகள் இரு பத்திரண்டில் ஒன்றாகத் திருவல்லிக்கேணி எனப்படும் இந்தத் திவ்ய தேசம் சென்னை யில் சிறப்புற்று விளங்குகிறது.

இந்த க்ஷேத்திரத்தின் மஹாத்மியம் ப்ரஹ்மாண்ட புராணத்தில் அடங்கிய 'ப்ருந்தாரண்ய க்ஷேத்திர மஹாத்மியம்" மஹேச்வர நாரத ஸம்வாதத்தில் பத்து அத்தியாயங்களில் விவரிக்கப்பட்டுள்ளது, இங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீரங்கநாதர், ஸ்ரீநரஸிம்மர், சக்கரவர்த்தித் திருமகன். ஸ்ரீபார்த்தசாரதி, ஸ்ரீகஜேந்திர வரதர் ஆக ஐந்து எம்பெருமான்கள் ஸ்ரீபேயாழ் வார், திருமழிசைப்பிரான், திருமங்கை மன்னன் ஆகியோரால் மங்களாசாஸனம் பெற்ற பெருமையும் கொண்டவை. மஹாத்மியத்தில் கண்டுள்ளபடி எம்பெரு மான் இந்த க்ஷேத்திரத்தில் சேவை ஸாதிக்கும் விஷயம் பற்றிச்சிறிது விண் ணப்பித்துக் கொள்கிறேன்.

### பார்த்தஸாரதி வைபவம்

வியாஸ மஹரிஷியின் சிஷ்யரான ஆத் ரேய மஹரிஷியின் விருப்பப்படி வியாஸர் ஸ்ரீமந்நாராயணன் ரூபத்தை வாஸுதேவ மூர்த்தியாக உத்தமமான சங்கத்தை வலது கையில் உடையவராகவும் தான முத்திரை கூடிய இடது கையை உடைய வராகவும் கொண்ட ஸ்ரீகிருஷ்ணவதார மூர்த்தியாக ஸ்ரீ பார்த்தஸாரதி என்கிற திருநாமத்துடன் ஆவாஹனம் செய்து சாஸ்த்ரோக்தமாக ஆராதனம் செய்து ஆத்ரேய மஹரிஷியிடம் கொடுத்து

"ஆத்ரேய ! த்வம் மஹாபாக ! கத்வா
ப்ருந்தாவனம் சுபம்
சுமதேராச்ரமம் ஸௌம்ய வஸநோ
மஹாத்மநா |
தத்ர ரம்யே வநோத்ருசே ஸம்ஸ்தாப்ய
ப்ரதிமாம் இமாம் |
வைகாநஸேந விதிநா ஸ்மர்ச்சயு ஜகத்
குரும் ||"

என்று நியமித்தார். ஆத்ரேயர் அதன் படிக்கே துளஸீகாநநமாயும், மோக்ஷ ப்ராப்தமாயுள்ள ஸுமதி என்கிற ராஜ ரிஷி தவம் செய்யும் ப்ருந்தாரண்ய க்ஷேத்

திரத்தையடைந்து ருக்மிணியுடன் திகழும் ஸ்ரீபார்த்தசாரதி ஸ்வாமி திவ்ய மங்கள அர்ச்சாவதார திருமேனியைப் பலராமர், சாத்யகி, ப்ரத்யும்நர், அநிருத்தர்களுடன் கூடியவராக வைகாநஸ ஆகம விதிப்படி பிரதிஷ்டை செய்து பலகாலம் ஆராதித்தார். துண்டீர மண்டலத்தைச் சேர்ந்த ஸுமதி என்னும் ராஜா அனேக காலம் திருவேங்கடமுடையானை ஸேவித்து வருகையில் ஒருநாள் சங்கசக்கரதாரியாயிருக்கும் தங்கள் ஸ்வரூபத்தைப் பார்த்தன் தன் ஸாரதியாய் ஸாரத்யம்செய்த ப்ரகாசமான ஸாரத்ய சின்னத்துடன் கூடிய ஸ்வரூபமாக ஸேவை ஸாதிக்க வேண்டுமெனப்பிரார்த்திக்க எம்பெருமானும் மனமுவந்து அளித்த நியமனப்படி ஸுமதியும் ப்ருந்தாரண்ய க்ஷேத்திரத்தையடைந்து ஸ்ரீபார்த்தஸாரதியாகக்கண்டுகளித்ததாக ஐதிஹ்யம். இந்த விருத்தாந்தப்படிக்கே கீதாசாரியன் வேங்கடகிருஷ்ணன் என்னும் திருநாமமும் கொண்டு இங்குப் பிரஸித்தமாகத் திகழ்கிறுர்.

### மந்நாதர் பிரபாவம்

துளஸீவனத்தில் ப்ருகு, அத்ரி, மரீசி, மார்க்கண்டேயர், ஸுமதி, சப்தரோமா, ஜாலி என்கிற ரிஷிகள் தவம் செய்து கொண்டிருந்தார்கள். ஸ்ரீவைகுண்டத்தில் ஏற்பட்ட பிரணயகலகத்திஞல் உண்டான வசத்திஞல் பெரிய பிராட்டியார் க்ஷீராப்தியினின்று ப்ருந்தாரண்ய க்ஷேத்திரத்தையடைந்து கைரவிணிக்கரையில் திவ்ய மங்கள ஸ்வரூபமாகக் குழந்தை வடிவில் விளங்கினுர். அங்குத் தவமிருந்த ப்ருகு மஹரிஷி குழந்தையைத் தன் ஆச்ரமத்திற்கு எடுத்துச்சென்று தன் பத்னியிடமளித்து வேதவல்லி என்கிற திருநாமத்துடன் வளர்த்து வந்தார். லோகக்ஷேமத்தின் பொருட்டு எம்பெருமான் ப்ருகு ஆச்ரமத்தையடைந்தார். மஹரிஷியின் விருப்பத்திற்கிணங்க ஸ்ரீமந்நாராயணன் தன் திவ்ய மங்கள ரூபத்தைக் காட்ட மஹரிஷியும் கண்டு மகிழ்ந்தார். ஆச்ரமத்தில் வேதவல்லி என்னும் பெயரில் வளர்ந்துவரும் கன்னிகை தன் பொருட்டுக் கொடுக்கப்பட வேண்டுமென எம்பெருமான் கேட்டார். மஹரிஷியும் வேதவல்லியை அழைத்து விருப்பமறிய விஞவ, பிராட்டியும் மனமகிழ்ந்து "இவரே என் நாதன்" (மந்நாத:) என்று தன் விருப்பத்தைக் கூற ப்ருகு மஹரிஷியும் பூர்ண மனதுடன் சாஸ்த்ரோத்தமாகப் பிராட்டியை ஸ்ரிய: பதியான சர்வேச்வரனுக்குக் கன்யகாதானம் செய்து கொடுத்தார். இந்த வருத்தாந்தப்படிக்கே மந்நாதன் என்றும், என்னையாளுடையப்பன் என்றும் பெயர் பிரஸித்தம்.

### ந்ருஸிஹ்மர் விருத்தாந்தம்

பிரஸித்தராயும், பகவத்ச்ரேஷ்டராயும் அத்ரி மஹரிஷி இந்த க்ஷேத்ரத்தில் எம்பெருமானிடத்து மோக்ஷத்தை இச்சித்து வெகுகாலம் தவமிருந்தார். பரமதார்மீகரான கபில மஹரிஷியின் பௌத்திரர் விகட மஹரிஷி அத்ரி மஹரிஷி ஆச்ரமத்தையடைந்து தான் மரீசி மஹரிஷி பார்க்கவ மஹரிஷியிடம் கூறியதைக் கேட்டபடி மஹாமேரு பர்வதத்தில் தேவரிஷிகள், தேவதைகள் மத்தியில் வசிஷ்டர் வாயிலாக ஸ்ரிய: பதியானவர் அத்ரி மஹரிஷிக்கு ஸேவை ஸாதிக்கப்போகும் விஷயம் கூறியதைக் கேட்டு இங்கு வந்த விவரணம் கூறினுர். இருவரும் பல நாட்கள் தவமிருக்கையில் ஒருநாள் தேவேந்திராதி தேவர்களும் சந்துஷ்டியுடன் அங்கு வந்துள்ளதைக் கண்டு வியப்புடன் இருக்கையில் ஒளிவீசும் பொன்மயமான விமானத்தில் அனந்த, கருட, விஷ்வக்ஸேஞதி நித்யசூரிகளுடன், ஸகல தேவதைகளுடனும் பரிவாரங்களுடனும் ஸர்வாபரண பூஷிதராய் ஸ்ரீநரஸிம்மஸ்வரூபியாய் ஸேவை ஸாதித்தார். மஞேஹரமான இத்தலத்தில் லோகக்ஷேமார்த்தமாக வாஸம் செய்யத் திருவுள்ளம் கொண்டு பரிபூர்ண பக்தியைச் செய்த மஹரிஷிகளுக்கு மோக்ஷப்ராதனம் செய்து அர்ச்சாரூபியாய் ஸ்ரீநரஸிம்மர் வரப்ரஸாதியாக விளங்குகிறுர்.

**சக்கரவர்த்தித் திருமகன் ஏற்றம் :**

சசபத மஹரிஷிக்கும் ஹேலை என்கிற அப்ஸரஸாக்கும் குமாரனாகப் பிறந்து குழந்தையாகக் காட்டில் விடப்பட்டு மான் கூட்டங்களிடை குகையில் தனித்திருந்து இயற்கையாகத் தேன் கூட்டிலிருந்து வர்ஷித்த தேனை அருந்தி வளர்ந்தவர் மதுமான் எனத் திருநாமம் பெற்றவர். கார்க்கய மஹரிஷியின் உபதேசத்தால் இராமாவதார வைபவத்தை யறிந்து அவர் ஸ்வப்னம் ஸாதித்தபடியே துளஸீ கானனத்தில் கைரவணீ தீரத்தில் அனுஷ்டானங்களை மேற்கொண்டு எம்பெருமானை த்யானித்து பரம தபஸ்வியாக இருந்தார். ஸர்வ ஜகத்காரணனை ஸ்ரீமந் நாராயணன் மஹரிஷி மதுமானுக்குச் சக்கரவர்த்தித் திருமகனாக ப்ராதாக்கள் ஸஹிதராகவும் ஸீதாதேவி ஸமேதராகவும் ஸேவை ஸாதித்து லோக ஹிதார்த்தமாக அர்ச்சா ரூபியாய் இங்கு எழுந்தருளியுள்ளார்.

**கஜேந்திரவரதன் : திருவருட்பிரபாவம் :**

ஸப்தரோமா என்னும் பிரஸித்தரான மஹரிஷி கருடாரூடராயிருக்கும் வரதனை ஆவாஹனம் செய்து வைகாநஸ ஆகம விதிப்படி பிரதிஷ்டை செய்து ஆராதித்து பரமபத ப்ராப்தி பெற்றார். மீனமர் பொய்கை மலர் கொய்வான் சென்றிழிந்த கானமர் வேழம் துயர் தீரப் புள்ளூர்ந்து கஜேந்திர வரதனாக இங்கு ஸேவை ஸாதிக்கிறார்.

**பூஜா முறை :**

மேலும் இவ்வாலய பூஜா முறை வழக்கங்களும், உத்ஸவாதி விசேஷங்களும் சில, அடியேன் அறிந்தபடி விண்ணப்பிக்கின்றேன். ஸ்ரீவைகாநஸ ஸூத்ர பிரணேதா ஸ்ரீ விகநஸர் ஸ்ரீமந் நாராயணனின் மானஸிக புத்திரராக எம்பெருமானை ஆராதிப்பதற்காகத் திருவவதாரம் செய்தார். பகவானால் உபதேசிக்கப்பட்டு விகநஸர் வேத, வேதாந்தங்கள், சாஸ்த்ரங்கள் முதலியவற்றையும் நிஷேகாதி பதினெட்டு ஸம்ஸ்காரங்களைக் கொண்ட ஸ்ரீவைகாநஸ ஸூத்ரத்தையும் தம்முடைய சிஷ்யர்களான அத்ரி, ப்ருஹு, மரீசி, காச்யபர் ஆகியோருக்கு உபதேசித்தருளினர். வைகாநஸர்கள் அனுஷ்டிக்க வேண்டிய நித்திய கர்மா முறைகள், ஆலய நிர்மாணம் முதல் ப்ரதிஷ்டை பூர்த்தியாக விதிகள், நித்திய பூஜா விதிகள், உத்ஸவாதி பூஜா நியமங்கள், முறைகள் இவர்களால் விரிவாக வகுக்கப்பட்டுக் கூறப்பட்ட கிரந்தங்கள் வைகாநஸ ஆகமம் என்று வழங்கப் படுகின்றன. இந்த சாஸ்த்ரம் வேதங்களை மூலமாகக் கொண்டது. மரீசி எட்டு சம்ஹிதைகளும், ப்ருஹு பத்து அதிகாரங்களும், அத்ரி நான்கு தந்த்ரங்களையும், காச்யபர் நான்கு காண்டங்களையும் அனுக்ரஹித்துள்ளார்கள். இதில் பல லக்ஷம் க்ரந்தங்கள் (ச்லோகங்கள்) அடங்கியுள்ளன. இவ்விதம் ஸ்ரீவிகநஸர் அருளிய வைகாநஸ ஆகம பூஜை இந்தத் திவ்ய தேசத்தில் நடைபெறுகிறது. மேற்படி பகவத்சாஸ்த்ர விதிப்படி கூறப்பட்டுள்ள த்ருவ, கௌதுக, உத்ஸவ, ஸ்நபன, பலி பேரம் என்கிற பஞ்ச பேராராதனம் என்னும் உத்தம லக்ஷணப்படி பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. ஸந்நிதியில் 1. உஷத் கால பூஜை (விச்வரூபம்), 2. ப்ராதக் கால பூஜை (காலசந்தி), 3. மத்யான்ஹ ஆராதனம் (உச்சிக் காலம்), 4. சந்த்யாராதனம் (மாலை நித்யாநுசந்தானம்), 5. ராத்ரி ஆராதனம், 6. அர்த்த ஜாமம் (அரவணை) என ஆறு கால பூஜை எம்பெருமான் கண்டருளுகிறார். இது ஷட்கால ஆராதனம் எனப் பிரஸித்தம். எம்பெருமானுக்கு மிக்க உகப்பான ஷோடசோபசாரம் என்கிறபடிக்கே, த்யானம், ஆவாஹனம், பாத்யம், அர்க்யம், ஆசமநீயம், மதுபர்க்கம், ஸ்நபனம், வஸ்த்ரம், கந்தம் அக்ஷதம், புஷ்ப, புஷ்பந்யாஸ பீடார்ச்சனம், தூபம், தீபம், நீராஞ்சனம், நைவேத்யம், முகவாஸம் என்கிற பதினாறு வித உபசாரங்கள் கொண்டு இங்கு ஆராதனம் செய்யப்படுகிறது. இத்தகைய உபசார விசேஷத்தால் எம்பெரு

மானுக்கு ஸாந்நித்யம் அதிகம் ஏற்படுகிறது என ஆகம விதியில் கூறப் பட்டுள்ளது.

**உத்ஸவ விசேஷங்கள் :**

உத்க்ருஷ்டமான சங்கல்பங் கொண்டு எம்பெருமானுக்குச் செய்யும் யக்ஞம் உத்ஸவம் எனப்படும். ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி இங்கு பிரம்மோத்ஸவம், பவித்ரோத்ஸவம், பல்லவ உத்ஸவம், அத்யயனோத்ஸவம், ஜயந்தி உத்ஸவம், ஸமீப்ரஹணோத்ஸவம் (ஆயுத பூஜை-வன்ஹி மரம்), க்ருத்திகா தீபோத்ஸவம், ஜலப்லாவன உத்ஸவம், வஸந்தோத்ஸவம், தவன உத்ஸவம், கோடோத்ஸவம், நித்யோத்ஸவம், மாஸோத்ஸவம், பக்ஷோத்ஸவம் எனப் பல உத்ஸவங்கள் கண்டருளுகிறார். ஸ்ரீரங்கநாதர் மாசி சுக்லபக்ஷ துவாதசி வைவாஹிக உத்ஸவம், பங்குனி பல்லவோத்ஸவ திருக்கல்யாணமும் கண்டருளுகிறார். ஆனி மீ ஸ்ரீ நரஸிம்ம ஸ்வாமி பிரம்மோத்ஸவம் நடைபெறுகிறது. இந்த உத்ஸவங்கள் வைகாநஸ ஆகமத்தில் கூறியுள்ளபடி காலங்களையும், முறையையும், தென்னாசாரிய சம்ப்ரதாயத்தை அனுஷ்டித்தும் செய்யப்படுகிறது.

பிரம்மோத்ஸவம் அங்குரார்ப்பணம் சேனைமுதன்மையார் எழுந்தருளி ஆராதனம் கண்டு ஆசாரிய வர்ணம், அனுக்ரஹம் அர்ச்சகர் ப்ரார்த்தனா சூக்தம் கூறியபின் ஆழ்வார் கோவில் சென்று ம்ருத் சங்க்ரஹணம் செய்யப் படுகிறது. சேனைமுதன்மையார் திருவீதி வலமாக வேத, அத்யாபக கோஷ்டியினர் ஸ்வஸ்திவாசனம் கூற ஸந்நிதிக்கு எழுந்தருளுகிறார். யாகசாலா கிரியைகள், நிவேதனம் பூர்த்தியடைந்து, பட்டர் அனுக்ரஹம் கூற, கோஷ்டியார் ததாஸ்து சாதிப்பது வழக்கம் (அனுக்ரஹ முறை). பிரம்மோத்ஸவாங்கமாக ஆசாரிய ரித்விக்வர்ணம், ம்ருத்சங்க்ரஹணம், அங்குரார்ப்பணம், வாஸ்துஹோமம், த்வஜ கருடபிரதிஷ்டை, பேரீதாடனம், கத்யபத்யங்கள், துவஜாரோஹணம் ஆலய விமான பலி நிர்வாபனம், தேவார்ச்சனம், நவதிக் ஸந்தி, விசேஷ ஸ்நபனம், கும்பாராதனம், பிம்ப வஸ்த்ர, புஷ்பாலங்காரம், ஸப்யாக்னிகுண்ட ஹோமம், யாக தீக்ஷா ரக்ஷாபந்தனம், ப்ரதான ஹோமங்கள், உத்ஸவ பலி நிர்வாபனம், திருவீதி உத்ஸவம், வேதபாராயணம். பிரபந்த ஸேவைகள், உத்ஸவாந்த ஸ்நபனம், சயனஸ்தான உபசாரங்கள், புஷ்பாஞ்சலி ப்ரணாமங்கள் முதலான எம்பெருமானுக்கு உகப்பான கைங்கர்யங்கள் பல நடைபெறுகின்றன. மற்றும் தேவ-தேவ்யோ : ஸம்வாதம், நம்மாழ்வார் மத்யஸ்த ஸ்தான அருளிச் செயல்கள், அவப்ருத உத்ஸவம், உத்வாஸந ப்ரபந்தம் என்னும் விடை சாதிக்கும் கைங்கர்யங்கள் பல. பல்லக்கு, ரதோத்ஸவம், கோபுரவாசல் கருட தரிசனம் ஆகிய காலத்தில் ஸ்ரீமந்நாராயணன் ஸேவை செய்பவர்கள் புனர்ஜன்மம் அடைவதில்லை என்கிறபடிக்கே எம்பெருமானின் பரிபூர்ண கடாக்ஷம் பெற்றுத் திகழ்வார்கள் என சாஸ்திரம் கூறுகிறது. பேரீதாடன சப்தத்தால் ஸ்வர்க்கலோக வாஸிகளான தேவர்களுக்கு நன்மையும் பாதாளவாஸிகளான அஸுரர்களுக்கு நாசமும் உண்டாகிறது. மற்றும் லோகக்ஷேமமும், ஸர்வ பாப விமோசனமும் ப்ராப்தமாவதாக ஆகமத்தில் கூறப் பட்டுள்ளது.

பிரம்மோத்ஸவம் துவஜாரோஹணம் ஆகி பட்டர் விமான பலி ஸாதிக்கும் நேரம் எம்பெருமான் ப்ராகாரம் உள்ளே எழுந்தருளும்போது வேத, அத்யாபக கோஷ்டியினர் ஸ்வஸ்திவாசனம் உகப்பான கைங்கர்யம் சாதிக்கின்றார்கள். திருவீதி உத்ஸவம் முடிவுற்று எம்பெருமான் கல்யாணமண்டபம் அடைந்ததும் பட்டர் பிரம்மகோஷம் அனுக்ஞை கூற ததாஸ்து

அனுக்கிரஹம் கோஷ்டியார் சாதிக்கின்றனர். ரதோத்ஸவத்தன்று எம்பெருமான் திருத்தேருக்கு எழுந்தருளுகையில் கோஷ்டியினர் பெருமாளுக்குப் பின்பாக ஸ்வஸ்திவாசனம் சாதித்துக்கொண்டு வருகிறார்கள்.

பவித்ரோத்ஸவம்: இது ஸம்வத்ஸர பிராயச்சித்தமாக நடைபெறும் சாந்தி உத்ஸவம். ஸப்ததினங்கள் நடைபெறும் விசேஷ உத்ஸவம். அங்குரார்ப்பணத்தன்று எம்பெருமான் யாகசாலையில் திருமஞ்சனம், திருவாராதனம் கண்டருளி ஆசாரியவர்ணம் நடைபெறும். பட்டாசாரியர் அனுக்ஞை ப்ரார்த்தனை ஸூக்தம் சாதித்து அருளப்பாடு வேதங்கள், இதிஹாஸங்கள், பகவத்கீதை, ஸ்ரீவிஷ்ணு புராணம், ஸ்தோத்ரரத்னம், ஸ்ரீபாஷ்யம், அருளிச்செயலான திருவாய்மொழி விண்ணப்பம் செய்வார்கள் என்று அருளப்பாடு கூற, வேத, அத்யாபக கோஷ்டியினர் முறையே அந்தந்த கிரமங்கள் ஸேவிப்பது மிக விசேஷமான உகப்பான கைங்கர்யம். பிறகு யாகசாலை அங்குரார்ப்பணம், பவித்திர பிரதிஷ்டை மறுநாள் கும்பாவாஹனம், திருவாராதனம், ஔபாஸனம், ஸப்யம், பௌண்ட்ரீகம் குண்டங்கள் அக்னி ப்ரதிஷ்டை, ஹோமங்கள், வேதபாராயண, திவ்யப்ரபந்த சேவையுடன் பிரதிதினம் நடைபெறுகிறது. பூர்ணாஹுதி முடிந்து பெருமாள் கும்பத்துடன் மூலஸ்தானம் எழுந்தருளும்போது வேத, அத்யாபக கோஷ்டியினர் ஸ்வஸ்திவாசனம் கைங்கர்யம் சாதிக்கின்றனர். சாத்து முறையில் பூர்த்தி நடைபெறும்.

இராப்பத்து உத்ஸவம் ஆரம்பமாகும் வைகுண்ட ஏகாதசியன்று பெருமாள் பரமபதவாசல் திறக்கப்பட்டதும் அர்ச்சகர் ஸ்ரீநம்மாழ்வாருக்குப் பரிவட்டம் மாலை ஸமர்ப்பித்து ஸ்ரீசடாரி ஸாதித்து கோஷ்டிக்கு ஸ்ரீசடாரி ஸாதித்து, பெருமாளருகே எழுந்தருளச் செய்து அர்ச்சகர் அருளப்பாடு, வேதங்கள், இதிஹாசம், பகவத்கீதை, ஸ்ரீவிஷ்ணுபுராணம், ஸ்தோத்ரரத்னம், ஸ்ரீபாஷ்யம், திருவாய்மொழி விண்ணப்பம் செய்வார்கள் என்று சொல்ல, கோஷ்டியினர் முறையே கிரமமாக ஸேவிப்பது எம்பெருமானுக்கு முகோல்லாசத்தைத் தருவதும் அனைவருக்கும் உகப்பான காட்சியாகவும் அமைந்திருக்கும்.

விசேஷ ஸம்ப்ரோக்ஷண, பிரதிஷ்டை காலங்களிலும் அங்குரார்ப்பணத்தன்று மேலே குறித்துள்ள முறையில் வேத விண்ணப்பம், பிரபந்த விண்ணப்பம் செய்வதும் நடைபெறும். யாகசாலையில் ஹோமங்கள் காலத்தில் வேதபாராயண, பிரபந்த ஸேவைகள் நடைபெறும். பூர்ணாஹுதி நடந்து கும்பம், பிம்பம் மூலஸ்தானத்திற்கு எழுந்தருளுகையில் கோஷ்டியார் ஸ்வஸ்திவாசனம் கூற உடன் வருவது அருங்காக்ஷியாக இருக்கும்.



ஸ்ரீவைகாநஸர்களின் சம்ப்ரதாயம் ஸ்ரீராமானுஜரின் விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயத்திற்கு உடன்பட்டதே. லக்ஷ்மி விசிஷ்டாத்வைதம் என வழங்கப்படும் இது ஸ்ரீமந்நாராயண பரத்வத்தையே சிறப்பாகக் கொண்டது. ஸந்நிதியில் நடைபெறும் அருளிச்செயல் ஏற்றம் வைகாநஸ ஆகமத்திற்கு உகப்பாகவே அனுஷ்டிக்கப்படுகிறது. அதன் கிரமத்தைக் கொண்டே அருளிச்செயல் ஏற்றம் மிக்க ஆழ்வார், ஆசாரியாள் பிரதிஷ்டையினை அவரவர்கள் அம்சத்தையனுசரித்து த்யான ஸ்லோகங்களையும் மூர்த்தி மந்த்ரங்களையும் கொண்டு வைகாநஸ ஆகம விதிப்படி பிரதிஷ்டை செய்யப்படுகிறது. எம்பெருமானுக்கு உகப்பான ஆராதனாதி உபசாரங்கள் செய்யப்படுவது போலவே அருளிச்செயல்கள் ஏற்றம் கொண்ட ஆழ்வாராசாரியர்களுக்கும் ஆகம விதிப்படி நித்திய நைமித்திக ஆராதனங்கள்

செய்யப்படுகிறது. ஸ்ரீவைகானஸ ஆகமம் அருளிச்செயல் ஏற்றத்திற்கும் ஒருமித்த கருத்துக் கொண்டது என்பதை எம்பெருமானுர் திருவவதாரம் செய்த ஸ்தலத்தில் நடைபெறும் வைகானஸ ஆகம ஆராதனம் துல்யமாக விளக்குகிறது. பிரம்மோத்ஸவ காலத்தில் கூறப்படும் ஸம்வாத பிரயோகங்களில் மணிப்ரவாள நடையில் அமைந்துள்ள தமிழ்நடையிலுள்ள ச்லோகங்களும், உத்வாஸன ப்ரபந்தம் என்னும் விடைசாதித்தல்படலத்திலும் அமைந்துள்ள மணிப்ரவாள நடைகளிலும் அருளிச்செயல் பாடல்கள் பல இடம் பெற்றுள்ளன.

மற்றும் உத்ஸவாதி விளக்கங்கள் விரிவானதாக உள்ளது. காலம் மற்றும் அடியேனுக்கு அளித்த நியமனம் இரண்டையும் கருத்தில் கொண்டு இத்துடன் வியாசத்தை முடிக்கிறேன்.

விற்பன்னர்கள் பலர் அரிய கருத்துக்கள் பல பிரகாசிக்கவிருக்கும் இம்மலரில் அடியேன் கலந்து எழுத வாய்ப்பளித்த வேத அத்யாபக கோஷ்டி நிர்வாகிகளுக்கு அடியேன் க்ருதக்ஞைகளை விண்ணப்பித்துக்கொள்கிறேன்.

---

# திருவல்லிக்கேணி ஸந்நிதியில் நடைபெறும் திருக்கல்யாணங்களும், விசேஷ உத்ஸவங்களும்

ஸ்ரீ. உ. வே. N. V. கோவிந்தராஜ பட்டாசாரியார்

(சின்னமுறை பரம்பரை அர்ச்சக மிராசுதார்)

ஸ்ரீய:பதியான ஸ்ரீமந்நாராயணன் "பரத்வஞ்ச ததோ வ்யூஹம் விபவம் சாந்தராத்மகம். அர்ச்சாவதாரம் சாஸ்த்ராணாம்" என்கிறபடி பரத்வம், வியூஹம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரம் என்கிற ஐந்து நிலைகளிலே இருந்து இவ்வுலகை ரக்ஷிக்கிறார். இவற்றுள் அர்ச்சாவதாரமே எல்லோரும் ஈடுபட்டுப் பலனடைவதாக உள்ளது என்று கீழ்க் கண்ட அர்ச்சனா நவநீத ச்லோகம் "ஆராதனானாம் ஸர்வேஷாம் விஷ்ணோராராதனம், பரம் யேநகேந ப்ரகாரேண விஷ்ணோரர்ச்சந முத்தமம்| ஆத்மார்த்தம் வா பரார்த்தம் வாக்ருஹ தேவாலயே பிவா அர்ச்சனம் வாஸுதேவஸ்ய லக்ஷ கோடி குணம் பவேத்||" எனக் கூறுகிறது. இவ்வண்ணம் பெருமையுடன் திகழும் ஸ்ரீமந்நாராயணன் லோகக்ஷேமார்த்தம் அர்ச்சாரூபியாய் ஸ்ரீ பார்த்தஸாரதியாக எழுந்தருளியுள்ள நம் ப்ருந்தாரண்ய க்ஷேத்திரத்திலே நடைபெறும் விசேஷ உத்ஸவங்களையும், திருக்கல்யாணங்களையும் பற்றி அடியேன் சிற்றறிவுக்குத் தெரிந்தவரையில் தெரிவித்துக் கொள்கிறேன்.

அனந்த கல்யாண குணங்களையுடைய ஸ்ரீமந்நாராயணனின் நித்ய கல்யாணகுண வைபவங்களை அர்ச்சாவதாரத்திலே நித்ய விபூதிகளை நாம் கண்டு ஆனந்தித்து வருகின்றோம். ஸ்ரீவைகானஸ பகவத் ஸாஸ்திரத்திலே க்ரஹார்ச்சையும் ஆலயார்ச்சையும் விசேஷமாகச் சொல்லப்பட்டுள்ளன. அதில் 'வைவாஹிகம்' என்கிற திருக்கல்யாண மஹோத்ஸவத்தைப் பற்றியும், தெய்வீகம், சாரீரம் இரண்டுக்கும் க்ரஹ்ய சூத்ர ரீதியாக, ச்ரௌதமாக அக்னிகார்யம் சொல்லப்பட்டுள்ளது. மேற்படி சூத்ர ரீதியாக விவாஹம் எட்டு விதமாக உள்ளது. அதாவது ப்ராம்மம், தேவம், ப்ராஜாபத்யம், ஆர்ஷம், ஆஸுரம், காந்தர்வம், ராக்ஷஸம், பைசாசம் என்று விவரிக்கப்பட்டுள்ளது. தைவீகத்திற்கு ப்ராம்ம விவாஹமும், காந்தர்வ விவாஹ சூத்ர ரீதியாகவும் சொல்லப்பட்டுள்து.

நம் ப்ருந்தாரண்ய க்ஷேத்திரத்திலே எழுந்தருளியுள்ள ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமிக்கும் ஸ்ரீ ஆண்டாளுக்கும் காந்தர்வ விவாஹ சூத்ரப்படி மாலை மாற்றல்: மாங்கல்ய தாரணம் மட்டும் ஹோமாதிகள் இல்லாமல் போகியன்று திருக்கல்யாணம் கண்டருளுகிறார்.

ப்ருகு மஹரிஷியின் புத்ரியாக அவதரித்த ஸ்ரீ வேதவல்லி என்கிற திருநாமமுடைய ஸ்ரீ மஹாலக்ஷ்மியை, ச்ரிய: பதியான க்ஷீராப்திநாதனான ஸ்ரீமந் நாராயணன் ஸ்ரீமந்நாதன் என்கிற திருநாமம் ப்ரகாசிக்க இந்த ப்ருந்தாரண்ய க்ஷேத்திரத்திலே எழுந்தருளி மாசி மாதம் சுக்ல பக்ஷ துவாதசியன்று ப்ராம்ம விவாஹ சூத்ரப்படி, 'வாரணமாயிரம்' என்று ஆண்டாள் அருளிச்செயலில் உள்ளது போல, திருக்காப்பு நாண்தரித்தலும், அக்னியை வலம் வருதலும், அச்சுதனின் கைமேல் கை வைத்துப் பொரியிடலும், அம்மி மிதித்தல், ஸப்தபதி முதலான வேதோக்த வைதீகமான ஹோமாதிகளைச்

செய்தும் பாணிக்கிரஹணம் (திருக்கலயாணம்) செய்துகொடுத்ததாக நம் ப்ரம்மாண்ட புராணம் கூறுகிறது. "ததஸ்தஸ்மிந் திநே ரஸ்து ப்ருந்தாரண்யே மஹாமதிஃ| மந்நாதம் ப்ரணமேத் விப்ரஃ ஸ யாதி பரமம்பதம்||" என்கிறபடி யாதொரு புத்திமானுன மனுஷ்யனுனவன் மாசி மாதம் சுக்லபக்ஷ துவாதசியன்று இந்த க்ஷேத்திரத்தை அடைந்து ஸ்ரீ வேதவல்லி ஸமேத ஸ்ரீமந்நாதனை ஸேவிக்கிருனே அவன் ஸகல ஐச்வர்யத்தையும் அடைந்து அந்தத்தில் பரமபதத்தை அடைவான் என நம் ப்ரம்மாண்ட புராணம் கூறுகிறது.

ஸ்ரீ வேதவல்லித் தாயாருக்கும் ஸ்ரீமந்நாதருக்கும், பங்குனி மாதம் உத்தர பல்குநி நக்ஷத்திரமாகிய ஸ்ரீ வேதவல்லித் தாயாரின் திருநக்ஷத்திரத்திலே காந்தர்வ விவாஹ ரீதியாக ஹோமாதிகள் இல்லாமல் மாலை மாற்றல், மாங்கல்யதாரணம் மட்டும் பங்குனி உத்திர திருக்கல்யாண மஹோத்ஸவத்தில் கண்டருளுகிருர். மேற்படி மூன்று திருக்கல்யாண விபவங்கள் நமது ஸன்னிதியில் ப்ரதி வருஷமும் நடக்க எம்பெருமானின் கடாக்ஷத்தால் நாம் கண்டுகளித்து வருகிறோம்.

உத்ஸவங்களிலே நித்யோத்ஸவம், பக்ஷோத்ஸவம், மாஸோத்ஸவம், ஸம்வத்ஸரோத்ஸவம், பிரம்மோத்ஸவம், ஸ்ரத்யோத்ஸவம், ஸாந்த்ரோத்ஸவம், பல்லவோத்வஸம், பவித்ரோத்ஸவம், வஸந்தோத்ஸவம், கந்தோத்ஸவம், டோலோத்ஸவம், அத்யயனோத்ஸவம், க்ருத்திகாதீபோத்ஸவம், லக்ஷ்மீநாராயணோத்ஸவம், ஜலப்ராவணோத்ஸவம் எனப்பலவிதமான உத்ஸவங்கள் உள்ளன. இவற்றுள் ப்ரதி வருஷமும், ப்ரதிதினமும் தொடர்ந்து நடைபெறும் உத்ஸவம் நித்யோத்ஸவம் எனவும், துர்பிக்ஷம், வியாதி, சத்ரு பயம், பஞ்சம் ஏற்படும்போது அவை நீங்கச் செய்யும் உத்ஸவம் ஸாந்த்ரோத்ஸவம் எனவும், ஸ்ரத்தைகொண்டு ப்ரார்த்தனை மூலம் செய்யும் உத்ஸவம் ஸ்ரத்யோத்ஸவம் எனவும், "பகாரோ பாபநாசாயீ, விகாரோ விக்னசாந்தயே த்ருகாரம் த்ராணநப்ரோக்தம் இதிபவித்ரஸ்ய லக்ஷணம்" என்கிற ஸ்ரீபகவத் சாஸ்திரப்படி ஸர்வபாபங்கள் அகலவும், ஸகல கார்யங்களும் தடங்கல் இல்லாமல் நடக்கவும், லோக க்ஷேமத்திற்காகவும் பவித்ர உத்ஸவம் நடைபெறுகிறது. பிரம்மோத்ஸவத்தில் ஒருநாள் உத்ஸவம் செய்வது சாந்தியை அளிக்குமென்றும், மூன்றுநாள் உத்ஸவம் புஷ்டியை அளிக்குமென்றும், ஐந்துநாள் உத்ஸவம் ஜயத்தை அளிக்குமென்றும், ஏழுநாள் உத்ஸவம் அத்புதத்தை அளிக்குமென்றும், ஒன்பதுநாள் உத்ஸவம் ஸர்வமங்களத்தை அளிக்கக் கூடியது என்றும் உள்ளதால் ஒன்பதுநாள் உத்ஸவமே சிறந்தது என ஸ்ரீபகவத் சாஸ்திரம் கூறுகிறது. பிரம்மோற்சவத்தில் துவஜாரோகண உத்ஸவம், கருடோத்ஸவம், சூர்ணுபிஷேக வஸந்தோத்ஸவம், ரதோத்ஸவம், அவரோகண உத்ஸவம் த்வாதசாராதன ஸ்ரீபுஷ்பயாகோத்ஸவம், சிறந்த உத்ஸவங்களாகும். "ரதஸ்தம் கேசவம் த்ருஷ்ட்வா புனர்ஜென்ம நவித்யதே |" என்கிறபடி ரதத்தில் எழுந்தருளியுள்ள பெருமானை ஸேவிப்பதால் புனர்ஜென்மம் இல்லை எனத் தெளிவாகிறது. ப்ரதிதினமும் யாகசாலையில் நித்யஹோமத்துடன் ஸர்வதைவத்யம், பாரமாத்மீகம் போன்ற விசேஷ ஹோமங்களும் நடைபெறுவதால் லோக க்ஷேமம், ஸர்வ பாப விமோசனம் ஏற்படுகிறது. மேற்கண்டபடி நம் ஸந்நிதியில் ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமிக்குச் சித்திரை மாதம் ச்ரவண நக்ஷத்திரம் தீர்த்தவாரியாகவும், ஸ்ரீநரஸிம்ம ஸ்வாமிக்கு ஆனி மாதம் ச்ரவண நக்ஷத்திரம் தீர்த்தவாரியாகவும் பிரம்மோத்ஸவம் வெகு விமரிசையாக நடைபெறுகிறது.

"ப்ருந்தேத் யக்ஷரயுக்மஞ்ச துலஸீத்யக்ஷரத்ரயம்| ஸங்கீர்த்தயதி யோநாம

தஸ்ய புண்யமநந்தகம் || என்கிறபடி ப்ருந்தா என்கிற இரு அக்ஷரங்களையும், துலஸீ என்ற மூன்று அக்ஷரங்களையும் ஸங்கீர்த்தனம் செய்கிறவர்களுக்கு அந்த க்ஷணமே புண்யமானது கிடைக்கும் என்பதில் ஐயமில்லை என நம் ஸ்தல புராண ச்லோகம் கூறுகிறது. இப்படிப் புகழ் பெற்ற நம் ப்ருந்தாரண்ய க்ஷேத்திரத்தில் ஸ்ரீ கீதையை அருளிச்செய்த கீதாசார்யனாகவும், ஸுமதி மஹாராஜாவுக்கு ப்ரத்யக்ஷமானவரும், ஸ்ரீவ்யாஸ பகவானால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டு ஸ்ரீ ஆத்ரேய மஹரிஷியினால் ஸ்ரீசாஸ்திரமான ஸ்ரீவைகானஸ விதியினாலே ஆராதிக்கப்பட்டவருமான ஸ்ரீபார்த்தசாரதி ஸ்வாமிக்கு வைகாசி மாதத்தில் வஸந்தோத்ஸவமும், ஆவணியில் பவித்ரோத்ஸவமும், ஸ்ரீஜெயந்தி உத்ஸவமும், ஐப்பசியில் ஸ்ரீமணவாளமாமுனிகள் சாற்றுமுறையன்று கைத்தல ஸேவையும், மற்றும் தீபாவளி, அன்னகூட உத்ஸவங்களும், கார்த்திகை மாதத்தில் திருக்கார்த்திகை உத்ஸவமும், மார்கழியில் அத்யயன உத்ஸவம் எனப்படும் பகல் பத்து, இராப் பத்து உத்ஸவங்களும், தை மாதத்தில் தைப்பூச உத்ஸவமும், மாசி மாதத்தில் மாசிமகம் உத்ஸவமும், "பஞ்சதீர்த்த ஸமாயுக்த மீத்ருஸீம்தாம் ஸரோவராம் | ஸ்நாநாயாத் கைரவணீம் விப்ரயதீச்சதி ஹரேபேதம் ||" என்கிறபடி பஞ்சதீர்த்தமாகிய இந்திர, ஸோம, அக்னி, மீன, விஷ்ணு தீர்த்தங்களின் மத்தியில் பாவனையான கைரவணி புஷ்கரிணியில், ஸ்பர்சந, ஸ்நாநங்களாலே மனுஷ்யர்களுடைய ஸகல பாபமும் அகலுகிறது எனப்புகழ் பெற்ற நம் கைரவணி புஷ்கரிணியில் ஸ்ரீபார்த்தசாரதி ஸ்வாமிக்கு மாசி அமாவாசை முதல் 3 நாள் தெப்போற்சவமும், மற்றும் ஸ்ரீநரசிம்மர், ஸ்ரீராமர், ஸ்ரீரங்கநாதர், ஸ்ரீவரதர் ஆகிய எம்பெருமான்களுக்கு ஒருநாள் தெப்போற்சவமும், ஸ்ரீபார்த்தசாரதி ஸ்வாமிக்கு ஐந்துநாள் தவனோத்ஸவமும் வெகு விமரிசையாக நடைபெறுகிறது.

ஸ்ரீமன்னாத ஸ்வாமிக்குப் பங்குனிமாதத்தில் பல்லவோத்ஸவம் ஐந்து நாட்கள், பங்குனி உத்திரம் ஸ்ரீவேதவல்லித் தாயாருடன் திருக்கல்யாணம் முடிய நடைபெறுகிறது. இந்த ஐந்து தினங்களும் திருவாய்மொழி மண்டபத்தில் ஸ்ரீமன்னாதஸ்வாமி எழுந்தருளியிருக்க, தினமும் "ப்ருந்தாரண்ய" ஸ்தல மஹாத்மயம் படித்து விளக்கப்படுகிறது.

ஸ்ரீராமருக்குப் பங்குனி மாதத்தில் ஸ்ரீராமநவமி முடிய 9 நாட்கள் உத்ஸவமும், ஸ்ரீவைகுண்டத்திலிருந்து விரைந்து கஜேந்திரனுக்கு, அருள்கூர்ந்த ஸப்தரோமா என்ற மஹரிஷியால் ஸ்ரீவைகானஸ விதிப்படி பிரதிஷ்டை செய்து ஆராதிக்கப்பட்ட ஸ்ரீகஜேந்திர வரதராஜ ஸ்வாமிக்கு வைகாசி மாதத்தில் 10 நாட்கள் உத்ஸவமும், ஸ்ரீ ஆண்டாளுக்கு ஆடி மாதத்தில் திருஆடிப்பூர உத்ஸவமும், மார்கழி மாதத்தில் போகிதிருக்கல்யாணம் முடிய 9 நாள் நீராட்ட உத்ஸவமும், ஸ்ரீபார்த்தசாரதி ஸ்வாமிக்கு தைமாதத்தில் ஈக்காட்டுதாங்கல் உத்ஸவமும் வெகு விமரிசையாக நடைபெறுகிறது.

ஸ்ரீவேதவல்லித்தாயாருக்குப் புரட்டாசி மாதத்தில் நவராத்திரி உத்ஸவமும் ஸ்ரீராமானுஜருக்குச் சித்திரை மாதத்தில் 10 நாட்கள் அவதார உத்ஸவமும், ஸ்ரீமணவாளமாமுனிகளுக்கு ஐப்பசி மாதத்தில் 10 நாட்கள் அவதார உத்ஸவமும் வெகு விமரிசையாக நடைபெறுகின்றது.

நம் ஸந்நிதியில் சிறப்பாகப் பணியாற்றிவரும் திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தான வேத அத்யாபக கோஷ்டியைச் சேர்ந்த ஸ்வாமிகளும் அவர்களது ஸபையும் பல்லாண்டு பரம க்ஷேமத்துடன் வர்த்திக்கவேண்டும் என ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமியை ப்ரார்த்தித்து அமைகிறேன்.

# ஸ்ரீ பாஞ்சராத்ரம்

[தேனேமலேயூர் பாஞ்சராத்ரம் ஸ்ரீவரதராஜ பட்டர்]

**கமப்யாத்யம் குரும் வந்தே**
**கமலாக்ருஹமேதிநம்।**
**ப்ரவக்தா சந்தஸாம் வக்தா**
**பஞ்சராத்ரஸ்ய யஸ் ஸ்வயம் ||**

ஸ்ரீ பாஞ்சராத்ரம் என்பது பகவத் சாஸ்த்ரம். இதை வெளியிட்டவர் ஸர்வஜ்ஞரான பகவானே இதற்கு ஆதார பூதமாகவும், வக்தாவாகவும் இருப்பதால், இதற்கு தனிப் பெருமை உண்டு. பாஞ்சராத்ரம் என்பதற்குப் பல இடங்களில் பலவிதமாகப் பொருள் தெரிகிறது, புராணம், வேதம், வேதாந்தம், ஸாங்க்யம்' யோகம் என்ன ஐந்து சாஸ்த்ரங்களும் இதன் எதிரில் இரவாகின்றன. இதுவே பகலாய் விளங்குகின்றது என்று பொருள் கொள்ளலாம். பகலில் வஸ்துக்களைக் காண்பது போலாகும், பாஞ்சராத்ர மூலமாகக் காண்பது. இந்த சாஸ்த்ரம் பஞ்சாயுதங்களின் அம்சமான ஔபகாயனர். சாண்டில்யர், பாரத்வாஜர், கௌசிகர், மௌஞ்யாயனர் ஆகிய ஐந்து ரிஷிகளுக்கு ஐந்து தினங்களில் ஸ்ரீவாஸுதேவனால் உபதேசிக்கப்பட்டது.



**ஆகமம் பரதம் சில்பம் வைத்யம்**
**ஜ்யோதிஷமேவ ச।**
**பஞ்சசாஸ்த்ராணி ஸம்யோகாத்**
**பாஞ்சராத்ர மிதி ஸ்ம்ருதம் ||**

ஆகமம், பரதம், சில்பம், வைத்யம், ஜ்யோதிஷம் இந்த ஐந்து சாஸ்த்ரங்களும் பாஞ்சராத்ரத்தில் முக்கியமான பாகம் வகிப்பதாகத் தெரிகிறது.

உலகத்திலுள்ளவர்கள் நற்கதி பெற பகவானின் திருவுள்ளப்படி நான்மறைகள் தோன்றின. அதனால் பயன் பெற்றவர்கள் சிலரே. எல்லோரையும் உய்விக்க வேண்டுமென்ற உறுதியுள்ளவன் ஆனதால் அவர்கள் வாழுமிடத்தில் தான் அர்ச்சாவதாரம் என்று விக்ரஹங்களின் வடிவில் அவர்களது விருப்பத்திற்குத் தக அமைத்து அவர்கள் விக்ரஹ வழிபாட்டிற்கு ஆகமங்களைப் படைத்தருளினான். இதை சௌனக பகவான்

**ஸுரூபாம் ப்ரதிமாம் விஷ்ணோ ;**
**ப்ரஸந்நவதநேக்ஷணம்।**
**க்ருத்வா ஆத்மந: ப்ரீதிகரீம்**
**ஸுவர்ண.ரஜதாதிபி : ||**
**தாமர்ச்சயேத் தாம் ப்ரணமேத்தாம்**
**விசிந்தயேத்।**
**விசத்யபாஸ்ததோஷஸ்து**
**தாமேவ ப்ரஸ்மருபிணீம் ||**

என்று அருளியிருக்கிறார். அவ்வாறான ஆகமங்கள் பலவற்றில் வைணவ ஆகமங்கள் வைகானஸம், பாஞ்சராத்ரம் என்ற இரண்டும் முக்கியமானவை. நமக்கு 108 திவ்யதேசங்கள் அமைந்ததுபோல். பாஞ்சராத்ர ஆகமமும் 108 ஸம்ஹிதைகளைக் கொண்டது. நம் திவ்யதேசங்களில் முக்யமானவை நான்கு.

**''ஸ்ரீரங்க மங்களநிதிம் கருணை**
**நிவாஸம்.........யதுசைல தீபம்.''**

ஆக ஸ்ரீரங்கம், திருப்பதி, காஞ்சி, திருநாராயணபுரம் இந்த நான்கில் திருவேங்கடமுடையான் வைகானஸ ஆகமத்தினால் திருவாராதனம் கண்டருளுகிறார். மற்ற மூன்று திவ்ய தேசங்களும் முக்யாதிகாரிகளான சுக்ல யஜுர் வேத,

காத்யாயன ஸூத்ர, கண்வ சாக அர்ச்சகர்களால் ஸ்ரீபாஞ்சராத்ர ஆகமப்படி நடைபெறுகிறது. பாஞ்சராத்ர ஆகம ஸம்ஹிதைகளுக்குள் "ரத்னத்ரயம்" என்று சொல்லப்படுகிற 'சாத்வத', 'பௌஷ்கர, ஜயாக்ய ஸம்ஹிதைகளால் திருநாராயணபுரம், ஸ்ரீரங்கம், காஞ்சீபுரம் ஸந்நிதிகளில் திருவாராதனம் நடப்பதாக ஈச்வர ஸம்ஹிதையில் காணப்படுகிறது. இவை மூன்றும் மூலவேதங்கள்: இவைகளுக்கு விவரணங்களான ஈச்வர பாரமேச்வர, பாத்ம ஸம்ஹிதைகள்தான் தற்காலம் நடைமுறையில் அனுசரிக்கப்படுகின்றன. அவற்றுள் பாத்ம ஸம்ஹிதையில் ஞானம், யோகம், க்ரியை, சர்யை என்ற நான்கு பிரிவுகள் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன,

க்ரியாபாதமும், சர்யாபாதமும் பாஞ்சராத்ரத்திற்கு அஸாதாரணச் சிறப்புமாகும் சர்யா பாதத்தில் திருவாராதனம், நித்யோத்ஸவம், மாஸோத்ஸவாதிகள், ப்ராயச்சித்தாதிகள் எல்லாம் கூறப்பட்டிருக்கின்றன.



அர்ச்சாமூர்த்திகளிலேயே கலியில் மனிதர்கள் எம்பெருமானை மனத்திற் கொள்ள முடியாது.

இந்த பாஞ்சராத்ரத்திற்கு ஸ்ரீ ஆளவந்தார் தமது ஆகமப்ராமாண்ய க்ரந்தத்திலும், ஸ்ரீ பாஷ்யகார் ஸ்ரீ பாஷ்யத்திலும். ஸ்ரீ தேசிகன் தமது பாஞ்சராத்ர ரக்ஷை முதலான க்ரந்தத்திலும் வேதத்திற்குச் சமமாக ப்ரமாணத்தை ஸாதித்திருக்கிறார்கள். ஸ்ரீ தேசிகன் பகவானைக் குறித்து 'சரணாகதி தீபிகை' என்ற ஸ்தோத்திரத்தில்.

த்வாம் பாஞ்சராத்ரிக நயேந ப்ருதக் விதேந
வைகாநஸேச்சபதா நியதாதிகார:।
ஸம்ஜ்ஞா விசேஷ நியமேந ஸமர்ச்சயந்த
ப்ரீத்யா நயந்தி பலவந்தி திநாநி தந்யா:॥

என்று வைகானஸர்களும், பாஞ்சராத்ரிகர்களும் உன்னைத் திருவாராதனம் செய்து ஆனந்தமாகக் காலத்தைக் கழிக்கிறார்கள் என்று ஸாதித்திருக்கிறார்.

திவ்ய தேசங்களுக்குள் ஸ்வயம் வ்யக்தம், திவ்யம், ஸைத்தம், ஆர்ஷம், மானுஷம் என்று வகைகள் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அதில் நம் ஸம்பிரதாயத்தில் பெருமாள்கோயில் என்னும் காஞ்சீ க்ஷேத்ரம் தேவாதிராஜன் ப்ரம்மா செய்த வேள்வியில் அவதரித்ததனால் 'ஸ்வயம் வ்யக்தம்' என்று சொல்லப்படுகிறது.

ப்ரம்மா ஜகத்ச்ருஷ்டி செய்துவிட்டு மன வ்யாகூலத்துடன் இருந்து பிறகு மன நிம்மதிக்காகப் பகவானை ஸாக்ஷாத்காரம் பண்ணவேண்டுமென்று கங்கா மத்யத்தில் நின்று தபஸ் செய்தார். அப்பொழுது ஆகாசவாணி உண்டாகி 'ஹே ப்ரம்மாவே! நீர் ஆயிரம் அச்வமேதங்களை அனுஷ்டித்தால்தான் மன நிம்மதியாகிப் பகவானைக் காணப்பெறுவீர். அப்படி முடியாவிட்டால் ஸத்யவ்ரத க்ஷேத்ரத்திற்குச் சென்று ஒரு அச்வமேத யாகம் செய்தால் அது ஆயிரம் அச்வமேத யாக பலன் கொடுக்கும். (ஏகஸ் தத்ர க்ருதோதரம்: வர்த்தேது ஸஹஸ்ரச:) என்று சொல்லிற்று. இதைக் கேட்டுப் பரமானந்தம் அடைந்த ப்ரம்மா காஞ்சிக்கு வந்து விச்வகர்மாவை அழைத்து ஹஸ்திகிரியை உத்தரவேதிகையாக்கி இந்த உத்தரவேதிகையில் அச்வமேத யாகம் செய்தார். அப்போது

சைத்ரே மாஸே ஸிதே பக்ஷே சதுர்தச்யாம் திதௌ முநே।
சோபநே ஹஸ்த நக்ஷத்ரே ரவிவார ஸமந்விதே॥
வபாஹோமே ப்ரவ்ருத்தே து ப்ராதஸ் ஸவந காலிகே।
தாது ருத்தர வேத்யந்த: ப்ராதுராஸீத் ஜநார்தந:॥

என்கிறபடி சித்திரை மாதத்தில் ஹஸ்த நக்ஷத்திரத்தில் தேவாதிராஜன் திருவவதாரம் செய்தருளி ப்ரம்மாவைப் பார்த்து என்ன வரம் வேண்டும் என்று கேட்க, ப்ரம்மாவும் அடியேனுக்கு ஸேவை ஸாதித்தபடி நான்கு யுகங்களிலும் எழுந்தருளியிருந்து எல்லாருக்கும் ஸேவை ஸாதித்து அவர்களுடைய அபிஷ்டங்களைப் பூர்த்தி செய்யவேண்டும் என்று ப்ரார்த்தித்தார். தேவாதி ராஜனும்

வேகவத்யுத்தரே தீரே புண்யகோட்யாம்
ஹரிஸ்ஸ்வயம் ।
வரத : ஸர்வபூதாநாம் அத்யாபி
பரித்ருச்யதே ॥

என்று எழுந்தருளியிருக்கிறார். ஆழ்வார்களில் பூதத்தாழ்வார், நம்மாழ்வார், திருமங்கை மன்னன் ஆக மூன்று பேரும் பாடல் அருளியிருக்கிறார்கள். ஆளவந்தார், பாஷ்யகாரரைக் கடாக்ஷித்து அவரும் அவருடைய தர்சனமும் விளங்கவேண்டும் என்று தேவாதிராஜனிடத்தில் "யஸ்ய ப்ரஸாத கலயாபதிர : ச்ருணோதி, பங்கு: ப்ரதாவதி ஜவேந ச வக்திமூக: அந்த: ப்ரபச்யதி ஸுதம்லபதே ச வந்த்யா தம் தேவமேவ வரதம் சரணம் கதோஸ்மி" என்று ப்ரபத்தி செய்தார். ஸ்ரீராமாநுஜரும் சாலைக் கிணற்றிலிருந்து திருவாராதனத்திற்குத் திருமஞ்சனம் ப்ரதி தினம் கொண்டு ஸமர்ப்பித்தார். அமுதனார் ஸ்ரீபாஷ்யகாரரை "தென்னத்தியூரர் கழலிணைக்கீழ் பூண்டவன்பாளன்" என்று ஸாதித்திருக்கிறார். திருக்கச்சிநம்பிகள் "தேவராஜாஷ்டகம்" ஸாதித்திருக்கிறார். கூரத்தாழ்வான் 'வரதராஜஸ்தவம்' அருளியிருக்கிறார். ஸ்ரீ தேசிகன் 'வரதராஜ பஞ்சாசத்' அருளியிருக்கிறார். ஸ்ரீ மணவாள மாமுனிகள் 'தேவராஜ மங்களம்' ஸாதித்திருக்கிறார். அதில் முக்கியமானது "ஸ்ரீகாஞ்சி பூர்ண மிச்ரேண, ப்ரீத்யா ஸர்வாபி பாஷினே, அதீ தார்ச்சா வ்யவஸ்தாய ஹ்ஸ்த்யத்ரீசாய மங்களம்'[2] அதாவது தேப்பெருமாள் அர்ச்சா சமாதியைக் கடந்து திருக்கச்சிநம்பிகளுடன் ராமானுஜருக்காக ஆறு வார்த்தை ஸாதித்தாரென்பது. ஆறு வார்த்தைகளாவன: 1. அஹமேவ பரம் தத்வம், 2. தர்சனம் பேதயேவச, 3. மோக்ஷோபாய: ப்ரபத்திஸ்யாத், 4. பூர்ணு சார்யம் ஸமாஸ்ரய: 5. தேஹாவஸாநே முக்திஸ்யாத், 6. அந்திம ஸ்ம்ருதி வர்ஜனம் என்பன.

மேலும் இந்தத் திவ்ய தேசத்தில் கருடோத்ஸவம் மிக முக்கியமானது. மூன்றாம் திருநாள் காலையில் விசேஷமாக கோபுர வாயிலில் ஸேவை ஸாதிப்பதைப் பற்றி ஸ்ரீதொட்டையாச்சார் என்ற ஆசார்ய ஸார்வபௌமர் ச்லோகங்கள் அருளிச்செய்திருக்கிறார். இங்கு ப்ரம மோத்ஸவம், ப்ரம்மாவே நடத்தினதால் "ப்ரம்மோத்ஸவம்" என்ற பெயர் மிகப் பொருத்தம்.

# யதீந்த்ர ப்ரவணரும் பொன்னடிக்கால் ஜீயரும்

(ஸ்ரீ உ. வே. உபந்யாஸ ரத்நாகர வானமாமலை, திருமலை அனந்தாண்பிள்ளை சடகோபாசாரியர்)

எம்பெருமானாருடைய அபராவதார மான மணவாள மாமுனிகளின் சிஷ்யர் களுள் முதல்வர் வானமாமலை பொன்னடிக் கால் ஜீயர் என்ற ஒன்றான ராமானுஜ ஜீயர் ஸ்வாமி. மணவாள மாமுனிகளுக்கு எம்பெருமானாரிடம் ஈடுபாடு அதிகம். ஆதலால் அவரை யதீந்திர ப்ரவணர் என்று யாவரும் பாராட்டினர், வானமா மலை ஜீயருக்கு மணவாள மாமுனிகளிடம் அவ்வளவு ப்ராவண்யம் உண்டு. இவர் ஸ்ரீ மணவாள மாமுனிகளை விட்டுப் பிரி வதே இல்லை. இவர் மணவாள மாமுனி களுக்கு, "நிழலும் அடிதாறும்" ஆனார். மாமுனிகளும் இவரைப்போல் ஆதரித் தார். தம்முடைய சிஷ்யர்களிடம் "நம் மைப் போல இவரையும் நீங்கள் பாராட்டு வீர்" என்று நியமித்தார். மாமுனிகளது பெருமையைப் பலவாறாகக் கேட்ட கோயில் அண்ணன் தமது பரிவாரங் களுடன் மாமுனிகளை ஆச்ரயிக்க வந்தார்.

மாமுனிகள் கோயில் அண்ணனைப் புன்முறுவலோடு ஏற்றுப் பல விஷயங்கள் உபதேசித்து வேண்டியனவெல்லாம் செய்தபிறகு, பக்கத்தில் உள்ளவர்களைக் காட்டி, ஆட்கொள்ள வேண்டும் என்று அண்ணன் விண்ணப்பிக்க, உடனே மா முனிகள் தமது ஆசனத்திலிருந்து இறங்கி, தமக்கு உண்டான ஏற்றம் எல்லாம் இவ ரிடத்திலேயே பூர்த்தி என்று வானமாமலை ஜீயரைக் காட்டி, "இவரை ஆச்ரயிங்கள்" என்று நியமித்துப் பொன்னடிக் கால் ஜீயரே! இந்த ஆனத்திலே அமர்ந்து இவர்களது அபிலாஷைகளைப் பூர்த்தி செய்யும்" என்று கூற, அவர் மிகவும் தயங்க, நம்முடைய கட்டளை, உடனே செய்யும் என்று கட்டளையிட்டார். உடனே வானமாமலை ஜீயர் தமது ஆசனத்தில் அமர்ந்து மற்றவர்களுக்குத் திருவிலச்சினை ப்ரஸாதித்து மந்திரங்களை உபதேசித்து தாஸ நாமங்களை ப்ரஸாதித்தருளினார்.

இவ்வண்ணமே அரங்கன் மாமுனி களைத் திருவுள்ளத்திற்கொண்டு, தன் னிடம் "இவ்வாறான ஆசார்யன் உலகத்தி லேயே அரிது" என்று நம்பிள்ளையிடத் திலே கேட்க முடியாத ஈட்டை இவரிடத் திலேதான் கேட்கவேண்டும் என்று திரு வுள்ளம் கொண்டு 'இவருக்கு' ஸ்ரீ சைலேச தயாபாத்ரம்' என்ற தனியனை வெளியிட் டருளினான். ஒருநாள் மாமுனிகளுடன் அவரது அந்தரங்கரான வானமாமலை ஜீயரை அருள்பாடிட்டு நவ பேரனை அரங்க நகரப்பனைக் கையிலே கொடுத் தான். ராமபிரான் விபீஷணனுக்கு அரங் களைக் கொடுத்தது போன்றது இதுவும்.

ஜீயர் ஸ்வாமி வானமாமலைக்கு எழுந் தருளி வானமாமலைப் பெருமாளையும், தெய்வநாயகனையும் மங்களாசாசனம் செய் தருளி, சந்நிதியின் முன்பாக ஒரு மடத்தை ஸ்தாபித்து அரங்கநகரப்பனை எழுந்தருளச்செய்து காலக்ஷேபங்களை அருளிச்செய்துகொண்டு எழுந்தருளி வந்தார்.

திருமலையில் கலாபத்தினால் வலசப் பட்டிருக்கும் ஸ்ரீவரமங்கைத்தாயார் ஒரு பெண்ணாகவந்து இவர் கனவிலே, "நான் தெய்வ நாயகனைவிட்டுப் பிரிந்திருக் கிறேன் என்னைக்கொண்டு வந்து இங்கே தெய்வ நாயகனுடன் சேர்த்து வைப்பீர்" என்று அருளிமறைந்தாள். உடனே

ஜீயர் திருக்கண் மலர்ந்து அருகிலே யிருப்பவர்களை எழுப்பிக் கனவைச் சொல்லி, உடனேயே திருமலைக்கு யாத்திரை எழுந்தருளினார். திருமலை அடைந்து திருவேங்கடமுடையானை மங்களாசாஸனம் செய்து கோயில் நிர்வாகத்தினரிடம் இக்கனவைச் சொல்லி, ஸ்ரீவரமங்கைத் தாயாரை எழுந்தருளப் பண்ணித்தர வேண்டும் என்று ஜீயர் ஸாதிக்க அவர்களும் இதேபோல் இதே கனவைச் சொன்னார்கள். நாச்சியார் என்னுடைய தகப்பனார் வருகிறார். அவரிடத்தில் என்னை அனுப்பிவையுங்கள் என்று சொல்ல இதை ஜீயரிடத்தில் அதிகாரிகள் சொன்னார்கள். மனமுகந்து விக்ரஹத்தை ஜீயரிடத்தில் கொடுக்க, திருமலை அனந்தாழ்வான் வம்சத்து ஒரு ஸ்ரீவைஷ்ணவருடன் வனமாமலைக்கு எழுந்தருளினார். வானமாமலையில் ஸ்ரீவரமங்கைத் தாயாருக்கும் தெய்வ நாயகனுக்கும் சிறப்புடன் திருக்கல்யாணம் செய்துவித்தார், இதன் நினைவாகப் பெருமாளும் ஸ்ரீவரமங்கைத் தாயாரும் மூன்று நாள் மடத்துக்கு எழுந்தருளுகிறார். ஒரு தகப்பன் தனது மகளையும் மருமகனையும் தன் வீட்டிற்கு அழைப்பது போல் ஜீயர் ஸ்வாமி தமது சிஷ்ய வர்க்கங்களுடன் எதிர்கொண்டு புதிய வஸ்திரங்கள் வழங்கி, குத்துவிளக்குகள் ஏற்றி வைத்து, பூர்ணகும்பத்துடன் வரவேற்றுப் பிறகு திருப்பி அனுப்பும்பொழுது திருப்பணியாரங்களுடன் கௌரவிப்பது இன்றும் கண்ணுக்கு அரியதோர் விருந்தாகும்.

வானமாமலைப் பெருமாள் சந்நிதியில் வானமாமலை ஜீயர் ஸ்வாமி, அழகிய மணவாள பட்டர் ஸ்ரீரங்காசாரியர் இன்றும் கோஷ்டியை நிர்வகித்து வருகிறார்கள். (நாலாயிர) அருளிச்செயல் பங்குனி உற்சவம், சித்திரை உற்சவம், அத்யயன உற்சவம், ஸ்ரீ உடையவர், மணவாள மாமுனிகள் உற்சவங்களில் சேவிக்கப்படுகின்றன. அந்த அந்த ஆழ்வார் ஆசாரியர்கள் திருநக்ஷத்திரங்களில் அவரவருடைய திவ்யப் பிரபந்தம் சேவிக்கப் படுகின்றது. உபயவேதாந்த காலக்ஷேபமும் நன்கு நிகழ்கின்றது.

இந்த ஸந்நிதி எட்டு ஸ்வயம் வ்யக்த க்ஷேத்ரங்களுள் ஒன்று, இன்றும் இந்த எம்பெருமானுக்கு எண்ணெய்க்காப்பு பிரதி தினமும் நடக்கிறது. ஒரு கோட்டை எண்ணெய்க்காப்பு உற்சவம் வருஷந்தோறும் நடக்கின்றது. அந்த எண்ணெய் மஹா ஔஷதம். இதை யாவரும் உபயோகித்து வருகிறார்கள்.

---

# மகரிஷிகள் அளித்த மேன்மை

ஸ்ரீ உ. வே. வித்வான் ந்யாயசிரோமணி,
[சொல்வேந்தர் பிள்ளைலோகம் ஸ்தலசயனத்துறைவார்]

**மகரிஷிகளும் பாரதநாடும் :**

பாரதநாடு புண்ணிய பூமி. இதில் நாம் வாழ்கிறோம். உலகைக் காக்கும் பரம புருஷன் ஸ்ரீமந்நாராயணன்; அவன் சொன்ன சொல் தவறாதவன்; 'ஸாதுக்களை ரக்ஷிப்பதற்காகவும், துஷ்டர்களை அழித்துத் தர்மத்தை நிலைநாட்டுவதற்காகவும் ஒவ்வொரு யுகத்திலும் அவதரிக்கிறேன்' என்று கூறினான். அதற்கு ஏற்றவாறு பல அவதாரங்களை மேற்கொண்டு பல்லாயிரம் ஆண்டுகள் வாழ்ந்து ரக்ஷித்ததும் பாரத நாட்டில்தான். பல மகரிஷிகள் இந்நாட்டில் வாழ்ந்தார்கள்; இப்போதும் அமைதி நிறைந்த மலைச்சாரல்களில் வாழ்வதாகவும் கூறுகிறார்கள். அவர்கள் உலகினுக்கு நன்மைகளைச் செய்திருக்கிறார்கள். மறைகளைக் காப்பாற்றி வந்தனர்; மறையின் பொருள்களை விளக்கினர். நாட்டு நலனுக்காகப் பல வேள்விகளைச் செய்தனர்; புராணங்களையும் இதிஹாசங்களையும் இயற்றிப் பக்தியை வளர்த்தனர். நல்ல அறிவுரைகளைக் கூறி அரசாட்சி நன்கு நடைபெற அரசர்களுக்கு உதவியுள்ளனர்.

ராம பக்தரான வால்மீகி மஹரிஷி இதிஹாஸ சிரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தை இயற்றியுள்ளார். வசிஷ்ட மகரிஷி இக்ஷ்வாகு வம்சத்திற்கே குலகுருவாக விளங்கி அவ்வமிசத்து அரசர்களுக்குப் பல வகைகளில் உதவி செய்துள்ளார். இவரது அறிவுரையைப்பெற்ற அரசர்கள் நேர்மையாக ஆட்சி புரிந்தார்கள். வசிஷ்டர், வாமதேவர், ஸுயக்ஞர், ஜாபாலி, காச்யபர், கௌதமர், மார்க்கண்டேயர், காத்யாயனர், விசயர் ஆகிய ஒன்பது மகரிஷிகளும் நவமணிகளாக இருந்துகொண்டு தசரதரை ரக்ஷிக்கும் வலிமையான அணியாக விளங்கினார்கள். விசுவாமித்ர மகரிஷி இராமனுக்கு எல்லா அஸ்திரங்களையும் கற்றுக்கொடுத்தார். அகஸ்தியர் பரத்வாஜர் அத்ரி போன்ற மகரிஷிகள் நாட்டின் க்ஷேமத்தைப் பாரித்து யாக யக்ஞாதிகளைச் செய்துகொண்டு தவம் புரிந்து கடமை தவறாமல் வாழ்ந்தார்கள். பரசுராமனே ஒரு மகரிஷிதான். பகவானே ஒரு மகரிஷியாக (பரசுராமராக) அவதாரத்தை மேற்கொண்டானே! மகரிஷிகள் தவ வலிமையால் ஜீவாத்ம பரமாத்ம பேதத்தை நன்கு அறிந்தவர்கள். எம்பெருமானை எப்போதும் ஆராதிப்பவர்கள் !

எம்பெருமானும் மகரிஷிகளுக்குத் தொண்டு செய்யவேண்டும் என்றே விரும்பினான். இராமபிரான் வனத்தில் வாசம் செய்த காலத்தே மகரிஷிகளின் ஆச்ரமங்களில் தங்கி அவர்களுக்குப் பணிவிடை செய்து மகிழ்வித்தும் மகிழ்ந்தும் இருக்கிறான். அவர்களுடைய நன்மைக்காக அரும்பாடுபட்டிருக்கிறான். பகவான் வியாஸ மகரிஷியாக அவதரித்து 'ஐந்தாம் வேதம்' என்று புகழும்படியான மாபாரதத்தை இயற்றி இருக்கிறார்.

**व्यासाय विष्णुरूपाय व्यासरूपाय विष्णवे ।**
**नमो वै ब्रह्मनिधये वासिष्ठाय नमोनमः ॥**

என்பது வியாசரின் பெருமையைப் பறை சாற்றுகிறது. பிறந்த நாளிலிருந்தே ப்ரஹ்மஞானத்தைப் பெற்றுப் ப்ரம்ம வித்தாக வாழ்ந்த சுகமுனிவர் தெள்ளமுதம் போன்ற பகவானின் சரித்திரங்களை 'ஸ்ரீமத் பாகவதம்' என்ற நூலாக (கிரந்தமாக) இயற்றித் தந்துள்ளார். வேறு நாடுகளில் ரிஷிகள் வாழ்ந்ததாகவோ, அவர்களால் அந்நாடுகள் நன்மை பெற்றனவாகவோ அறிய முடியவில்லை.

மகரிஷிகளும் ஸ்ரீவைஷ்ணவமும் :

ஸ்ரீமந்நாராயணனே மகரிஷி. எம்பெருமான் நர நாராயணர்களாக அவதரித்தான். நாராயண மகரிஷியாக இருந்து கொண்டு ரஹஸ்யத்ரயங்களில் முதலாவதான வலம் மிக்க திருமந்த்ரத்தை நரனுக்குப் பத்ரிகாச்ரமத்தில் வெளியிட்டார். पुराणोमुनिः என்றுன் ஒரு கவி. பராசரர், வியாஸர். சுகர் ஆகிய மூன்று மகரிஷிகளும் ஒரே குடும்பத்தின் பரம்பரையைச் சேர்ந்தவர்கள். பராசர மகரிஷி ஸ்ரீமந்நாராயணனின் பரத்வத்தைப் பரக்கக்கூறும் ஸ்ரீ விஷ்ணுபுராணத்தை அருளியுள்ளார். இது புராணங்களிலேயே மிகவும் சிறந்தது; ஸாத்விக புராணம் ஆளவந்தார் என்னும் மஹாசாரியர் இப் புராணத்தைப் 'புராண ரத்னம்' என்று பாராட்டினுர். பராசரமகரிஷியின் குமாரர் வியாசர். இவரே 'பிரஹ்ம ஸூத்ரம்' என்ற கிரந்தத்தை அருளிச் செய்தார். நமது ஆசார்ய ஸார்வ பௌமரான எம்பெருமானுர் (ராமாநுஜர்) இந்த ஸூத்ரங்களுக்கு (விசிஷ்டாத்வைத பாஷ்யம்) ஸ்ரீபாஷ்யம் அருளியிருக்கிறுர். விசாசரின் குமாரர் சுகமுனிவர் அருளிய பாகவதம் எம்பெருமானின் குணரத்ன கோசம். இவர்களால் வைணவம் ரக்ஷிக்கப்பட்டது. நம்மாழ்வாரையே ரிஷியாகக் கூறுவர். கிருஷ்ண த்ருஷ்ணு தத்வமாக (கிருஷ்ணனின் ஆசையே வடிவெடுத்தவராக) அவதரித்தவர் நம்மாழ்வார். இவர் திராவிடவேதமாகிற திருவாய் மொழியை அருளிச்செய்தார்.

ऋषिं जुषामहे कृष्णतृष्णातत्त्वमिवोदितम् ।।
सहस्रशाखां योऽद्राक्षीत् द्राविडीं ब्रह्मसंहिताम्

என்று பெரியோர் கூறுவர்.

மகரிஷிகளை மாமுனிவர்கள் என்றும் கூறலாம். மாமுனிவர் என்ற திருநாமத்தைப் பெற்றவர்களும் யதிபுங்கவர்களுமான ஆசார்யர்கள் இருவர் உபய வேதாந்தங்களையும் ஸ்ரீவைஷ்ணவத்துவத்தையும் ரக்ஷித்தருளினர். ஒருவர் எதிராச மாமுனிவர்; மற்றெருவர் அவரது அடுத்த அவதார புருஷரான மணவாள மாமுனிகள்; ஒருவர் ராமாநுசமுனி; இன்னெருவர் வரவரமுனி.

ரிஷிகளும் அர்ச்சாவதாரமும்:

எம்பெருமானின் (பகவானின்) விபவாவதாரங்களில் (குறிப்பாக, ராமகிருஷ்ணுவதார காலங்களில்) ரிஷிகள் பலர் வாழ்ந்தார்கள்; ராமாவதார காலத்தில் மிகவும் அதிகம். பெருக்காறுபோலே மிகவும் வேகமாக ஓடிச்சென்ற விபவாவதார காலத்திற்குப் பிறகு, அதிலே தேங்கின மடுக்கள் போல் இருக்கும் (அர்ச்சாவதார எம்பெருமான்களை) அர்ச்சாவதாரத்தை அனுபவிக்கும் பாக்கியசாலிகளாக நாம் இருக்கிறேம். நம் போல்வார் எளிதில் கிட்டிவணங்கும்படியாகப் பின்னுனார் வணங்கும் சோதியாய் எம்பெருமான் ஆங்காங்குக் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கிறுன். ஆழ்வார்களும் ஆசாரியர்களும் இந்த எம்பெருமான்களையே நாம் அனுபவிக்கும் நிதிகளாக நமக்குக் காட்டிக் கொடுத்திருக்கிறுர்கள். அவர்கள் முங்களாசாஸனம் செய்யும்போது பரவ்யூஹவிபவ (அந்தர்யாமி) நிலைகளையெல்லாம் கலந்தே அனுபவிக்கிறுர்கள். 'எய்துபவர்க்கு இந்நிலத்தில் அர்ச்சாவதாரம் எளிது' என்றுர்

நம்மாழ்வார். ஆழ்வார்களால் மங்களா சாஸனம் செய்யப்பெற்று எழுந்தருளி யிருக்கும் நிலங்களையே திவ்ய தேசங்கள் என்கிறோம்.

உலகில் பக்தர்கள் தீர்த்த யாத்திரை, க்ஷேத்ர யாத்திரை என்று யாத்திரை களாகப் பல இடங்களுக்குச் செல்லுகிறார் கள். இப்போது திவ்யதேச யாத்திரைகள் நடப்பதையும் காண்கிறோம். இவ்வாறு ஒவ்வோரிடத்திற்குஞ் சென்று ஆங்காங்கு எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களை ஸேவிக்கிறார்கள். அந்தந்த எம்பெருமா னின் பெருமைகளில் ஓரளவாவது அறிந்து கொள்ள வேண்டுமென்று ஆசைப்படு கிறார்கள். அவ்வாறு அறிய முற்படும் போது ஒவ்வொரு எம்பெருமானும் ஒவ் வொரு மகரிஷிக்காக, (அவரது வேண்டு கோளுக்கு இணங்கி) அவ்வூரில் வந்து உவந்து வாழ்வதாகவே தெரியவருகிறது. க்ஷேத்திரங்களின் பெருமைகளைக் கூறு கிறது. பிரஹ்மாண்ட புராணம். அதை ஆதாரமாகக் கொண்டே ஸ்தலபுராணங் களும் எழுந்துள்ளன. புராணப் பிரசித்த மாக இருந்தால் அந்தந்த க்ஷேத்திரத்திற் குத் தனிப்பெருமை. ஆழ்வார்களின் மங்களாசாஸனத்தினால் அந்த இடங்கள் திவ்யதேசம் என்ற சிறப்பை எய்து கின்றன.

**பிருகு மஹரிஷியின் ஏற்றம் :**

எல்லா ரிஷிகளுமே தவம் செய்கிறவர் கள்தான். ஆயினும் தபோபலம் (தவ வலிமை) மிக்கவர்கள் மஹரிஷிகள். அவர் களுள் ஏழு ரிஷிகளைச் சேர்த்து 'ஸப்தரிஷி கள்' என்று பெரியோர்கள் கூறுகின்றனர். அத்ரி, பிருகு, குத்ஸர், வசிஷ்டர், கௌத மர், காச்யபர், ஆங்கீரஸர் ஆகிய எழுவரும் 'ஸப்தரிஷிகள்'. நமது கோத்திரங்களில் இடம் பெற்றவர்கள் ரிஷிகள். சிலர் மூன்று ரிஷிகளின் ப்ரவரத்தைச் சேர்ந் தவர்களாகவும், மற்றும் சிலர் ஐந்து ரிஷி களின் ப்ரவரத்தைச் சேர்ந்தவர்களாகவும், மற்றும் சிலர் ஏழு ரிஷிகளின் ப்ரவரத் தைச் சேர்ந்தவர்களாகவும் இருப்பதைக் காண்கிறோம். சோளங்கிபுரத்தில் மலை மேல் எழுந்தருளியிருக்கும் அழகிய சிங்கரை 'ஸப்தரிஷிகள்' தினந்தோறும் ஆராதிக்கின்றனர் என்று கூறுவதுண்டு. அத்ரி முதலான ஸப்தரிஷிகள் காலையிலும் மாலையிலும் கைகளில் உபஹாரமாக 'பத்ரம் புஷ்பம் பலம் தோயம் (திருத் துழாய், மலர், பழம், தீர்த்தம்) ஆகிய வற்றை எடுத்துக்கொண்டு திருவேங்கட முடையானை ஸேவிக்க வந்து காத்திருப் பதாக 'ஸுப்ரபாதம்' அறிவிக்கிறது.

இவர்களுள் பிருகு மகரிஷிக்குத் தனிப் பெருமை. மந்வந்தரங்கள் பதினான்கு. இப்போது நடந்து வருவது ஏழாம் மந்வந்தரம். 1. ஸ்வாயம்பூ மந்வந்தரம். 2. ஸ்வாரோசிஷ மந்வந்தரம், 3. ஔத்தம மந்வந்தரம், 4. தாமஸ மந்வந்தரம், 5. ரைவத மந்வந்தரம். 6. சாக்ஷுஷ மந்வந் தரம், 7. வைவஸ்வத மந்வந்தரம், இப் போது நடைபெறுவது வைவஸ்வத மந்வந்தரம். ஸ்வாயம்பூ மந்வந்தரத்தில் மஹாலக்ஷ்மி ப்ருகு மகரிஷியின் புத்ரியாகத் தோன்றினாள். ஸ்வாரோசிஷத்தில் அக்னி யிலும், ஔத்தமத்தில் தீர்த்தத்திலும் (ஜலத்திலும்), தாமஸத்தில் பூமியிலிருந் தும், ரைவதத்தில் வில்வ மரத்திலும், சாக்ஷுஷத்தில் செந்தாமரைப் பூவிலும், வைவஸ்வதத்தில் (இந்த மந்வந்தரத்தில்) திருப்பாற்கடலிலும் மஹாலக்ஷ்மி தோன் றினாள்.

இவ்வாறு மஹாலக்ஷ்மி பிருகு புத்ரி யாகத் தோன்றியிருக்கிறாள்: அதனால் மஹாலக்ஷ்மிக்கு 'பார்க்கவி' என்று ஒரு திருநாமம். கிழமைகளுள் வெள்ளிக் கிழமையைப் பிருகு வாஸரம் என்கிறோம். இது மஹாலக்ஷ்மிக்கே உரிய கிழமை. பிருகுவின் புத்திரரான சுக்கிரனின் பெய ரால் வழங்கப்படும் இக்கிழமையில் ஸந்நிதிகளில் தாயாருக்குத் திருமஞ்

சனம், புறப்பாடு முதலியவை நடைபெறு பெறுகின்றன; விசேஷ அர்ச்சனைகளும் திருக்கல்யாணமும் வெள்ளிக்கிழமைகளில் நடக்கின்றன. பிருகு மஹரிஷியின் ஸம்பந்தம் ஒரு இடத்திற்கு இருக்குமாயின் அங்குப் பிராட்டியின் ப்ராதான்யத்தைக் காணலாம்.

**திரு அல்லிக்கேணி:**

திரு என்ற சொல்லை அடைமொழியாகக் கொள்ளாமல், திரு உகந்த அல்லிக்கேணி (மஹாலக்ஷ்மி உகந்து வாழும் அல்லிக்கேணி) என்று பொருள் கொள்வது மிகவும் சுவையுடையது இந்தத் திவ்ய தேசத்தில் முதலில் வந்து தோன்றியவள் 'அல்லித்தாமரையாள்': திருவல்லிக்கேணிக்கு பிருந்தாவனம், பிருந்தாரண்யம், துளஸீவனம், கைரவிணி என்று பல பெயர்கள் இருப்பதை அறிகிறோம். புஷ்கரிணியின் பெயரையே இவ்வூருக்கும் ஏற்பட்டதாகக் கொள்ளலாம். இவ்வூரில் வட கிழக்கில் இந்திர தீர்த்தம், தெற்கில் ஸோம தீர்த்தம், தென் மேற்கில் மீன தீர்த்தம், வடமேற்கில் அக்னி தீர்த்தம், வடக்கில் விஷ்ணு தீர்த்தமும் இருப்பதாக இவ்வூர் ஸ்தலபுராணத்தைக் கொண்டு அறியலாம். இப்போது எல்லா தீர்த்தங்களும் சேர்ந்து 'கைரவிணீ' என்ற புஷ்கரிணியாக(குளகமாக) இருக்கிறது. இதன் கரையில் பிருகு மஹரிஷி தவம் செய்து வந்தார். இவருக்கு மிகவும் அழகிய ஆசிரமமும் அமைந்திருந்தது. பெரிய பிராட்டியார் (மஹாலக்ஷ்மி) ஒரு நாள் இவரது ஆசிரமத்திலுள்ள சந்தனமரத்தடியில் ஒரு குழந்தையாகத் தோன்றினாள். பிருகு மஹரிஷி அக்குழந்தையை எடுத்துவந்து **வேதவல்லி** என்று பெயரிட்டு வளர்த்தார். இவள் மஹரிஷியின் பாதுகாப்பில் நன்கு வளர்ந்து ஆசிரமலக்ஷ்மியாக விளங்கினாள். ஸ்ரீமந் நாராயணன் அரசகுமாரனாக ஆச்ரமத்திற்கு அருகில் வந்து வேதவல்லியைக் கடாக்ஷித்தார். அவளும் ராஜகுமாரனைப் பார்த்துவிட்டுப் பிருகு மஹரிஷியிடம் சென்று இவரே 'மந்நாதன்' (என் நாதன்) என்று கூறினாள். பிருகு மஹரிஷியும் மாசி மாத சுக்லபக்ஷ த்வாதசி நன்னாளில் தன் புத்திரியான வேதவல்லியை மந்நாதனுக்கு (ரங்கநாதருக்குக்) கன்னிகாதானம் செய்து விவாஹத்தை நடத்திவைத்தார். வேதவல்லித் தாயாரின் பிறந்தகம் திருவல்லிக்கேணி; மந்நாதனின் ச்வசுர கிருஹமும் (மாமனார் கிருஹமும்) இதுவே. தனக்கு வேதவல்லியைக் கொடுத்து உபகரித்த பிருகு மகரிஷியை எம்பெருமான் அனுக்ரஹித்து, அவரது பிரார்த்தனைக்கு இணங்கி வேதவல்லித் தாயாரோடு இங்கேயே எழுந்தருளியிருக்கிறார். பிருகு மகரிஷியைப்போல் அத்ரி, மரீசி, புலஹர். ஆத்ரேயர், ஸப்தரோமா, ஜாபாலி, விகடர், முத்கலர் முதலான மகரிஷிகளும் இங்குத் தவம் செய்திருக்கிறார்கள். வியாஸமகரிஷி கீதாசார்யனை பார்த்தஸாரதியின் அழகிய திவ்யமங்கள விக்ரஹத்தைச் செய்து ஆத்ரேயரிடம் கொடுத்தார். ஆத்ரேயர் பார்த்தஸாரதியைப் பிரதிஷ்டை செய்து ஆராதித்துப் பெறற்கரிய பெரும்பயனைப் பெற்றார். அத்ரி மகரிஷிக்காக ஸ்ரீயோக நரசிம்மர் (தெள்ளிய சிங்கப்பெருமாள்) ஸேவை ஸாதித்தார். மதுமான் என்ற மகரிஷிக்காகச் சக்ரவர்த்தித் திருமகனும், ஸப்தரோமா என்ற ரிஷிக்காகக் கஜேந்திரவரதனும் ஸேவை ஸாதித்தார்கள். இந்த ரிஷியின் பிரார்த்தனைக்கு ஏற்றவாறு எம்பெருமான் (மூலவர்) கருடாரூடனாக ஸேவை ஸாதிப்பதை இத்தலத்தில் ஸேவிக்கலாம்.

**அளவற்ற ஆசை!**

தன்னைச்சுற்றி(த் தன் பெருமைகளைக் கூறும்) ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழவேண்டும்; அவர்களைவிட்டுப் பிரியாமல் இருக்க

வேண்டும் என்பது பகவானின் ஆசை! ஸ்ரீவைஷ்ணவர்கள் நிறைந்த இடம் செல்வம் மல்குமிடமாக அவன் நினைக்கிறான். உலகுக்கு நன்மை ஏற்பட வேண்டும் என்று எப்போதும் நினைப்பவர்கள் ரிஷிகள். அவர்களைவிட்டுப் பிரியாமல் வாழ வேண்டும் என்றும் நினைக்கிறார். இவ்வூரில் ஸ்ரீ அழகிய சிங்கர் அத்ரி மஹரிஷிக்குக் கொடுத்த வரத்தை நினைக்கும்போது அவரது கருணை கண்முன் அலை வீசுகிறது. முனிச்ரேஷ்டரே! நாற்புறமும் துளஸீ வனம்; பல ரிஷிகள் தவம் செய்கிறார்கள். எனக்கு இந்த இடம் மகிழ்வளிக்கிறது. இவர்களை விட்டுப் பிரியாது இங்கேயே இருக்கப் போகிறேன். மக்கள் என்னை ஸேவித்து 'அறியாமை, சினம், துன்பம், பாவம் ஆகியவை நீங்கி எக்காலத்திலும் இன்பம் அடைவார்கள்' என்று பகவான் திருவாய்மலர்ந்தருளினான்.

இவ்வூரில் இருந்த தீர்த்தங்கள் ஐந்து; எம்பெருமானை ஸேவிக்க ஆசைப்பட்டவர்கள் ஐவர் (ஐந்து மகரிஷிகள்) மகரிஷிகளுக்கு ஸேவை ஸாதித்த எம்பெருமான்கள் ஐவர். இப்படி ஐந்து மைந்துமைந்துமாகச் சிறப்புற்றிருக்கும் இடம் திருவல்லிக்கேணி. மகரிஷிகளால் மேன்மைபெற்ற இத்தலத்தின் பெருமைகள் யாரால் அளவிட்டுச் சொல்ல இயலும். பகவானின் குணங்களைப்போல் இத்தலத்தின் சிறப்பும் மனோ வாக்காயங்களுக்கு எட்டாதவாறு எண்திசையும் பரந்து விளங்குகிறது.

—

# வெளிநாடுகளில் வைணவம்

[Dr. K. V. ராமன்]

மிகத் தொன்மைக் காலந்தொட்டே இந்திய கலாசாரம் பல நாடுகளிலும் பரவி வந்துள்ளது. நமது சமயங்கள், மொழிகள், கட்டிடக் கலை, சிற்பக் கலை மற்றும் பல பண்பாட்டுக் கூறுகள் இவை இந்தோனேசியா, மலேயா, கம்போடியா, தாய்லாந்து, பர்மா போன்ற நாடுகளுக்குப் பரவி அங்கு ஒரு கலாசார எழுச்சியைத் தோற்றுவித்தன. அங்கு இந்து மதத்தின் பல கூறுகளும் பௌத்தமதமும் போட்டியின்றி ஒருமைப்பாட்டுடன் வளர்ந்துள்ள அற்புதத்தைக் காண்கிறோம். தென் கிழக்கு ஆசிய நாடுகளில் வைஷ்ணவம் எவ்வாறு சிறப்புடன் நிலவியுள்ளது என்பதை இக்கட்டுரையில் காண்போம்.

**ஊர்ப் பெயர்கள்:**

இந்தியப் பண்பாட்டின் பொக்கிஷங்களாகத் திகழும் இராமாயணமும், மகாபாரதமும் அநாதியாக ஆசிய நாடுகளுக்குப் பரவியிருந்தன. இத்தொடர்பினால் அங்கெல்லாம் பல ஊர்ப் பெயர்கள் நமது பழைய நகரங்களின் பெயர்களைத் தாங்கி நிற்கின்றன. தாய்லாந்து நாட்டின் பழைய தலைநகரத்தின் பெயர் அயோத்யா ஆகும். அங்கு ஆண்டுவந்த அரசர்களும் ஒன்றும் ராமர், இரண்டாம் ராமர் என்றே பெயர் பூண்டனர். இப்பொழுதும் தாய்லாந்து மன்னரது பெயர் ஒன்பதாம் இராமர் ஆகும். தாய்லாந்து நாட்டின் மற்றொரு நகரத்தின் பெயர் லவபுரி (லோப்புரி) என்பதாகும். இதுபோல ஆரண்யபிரதேஷ், விஷ்ணுலோக், இந்திரலோக், புரிராம், பிரதோம் நகோண் (பிரதம நகரம்) என்ற பல இந்தியப் பெயர்களைக் காணலாம். தாய்லாந்தின் தலைநகரமான பாங்காக்கின் பழையபெயர் ரத்தினகோசம் ஆகும்.

இதுபோல மகாபாரதப் பெயருடன் தொடர்புள்ள சில நகரங்களும் உள்ளன. தாய்லாந்தின் பழம்பெரும் நகரின் பெயர் துவாராவதி (துவாரகை) ஆகும். அது போல மதுரா என்ற ஊரும் அங்கு உள்ளது.

**கோயில்களும் சிற்பங்களும்:**

உலகத்திலேயே மிகப் பெரிய விஷ்ணு கோயில் கம்போடியா தேசத்தில் உள்ளது. யசோவர்மன் என்ற அரசனால் கட்டப்பட்ட இக்கோயிலுக்கு அங்கோர்வாட் என்று பெயர். மிகப் பிரம்மாண்டமான இக்கோவிலில் பல பிராகாரங்களும் கோபுரங்களும் உள்ளன, ராமாயணம் மகாபாரதம், ஹரிவம்சம் போன்ற நூல்களிலுள்ள காட்சிகளை இங்கு ஆயிரக் கணக்கான சிற்பங்களின் மூலம் சித்திரித்திருக்கிறார்கள். குருக்ஷேத்திரத்தில் நடந்த பாரதப்போர் விரிவாகக் காண்பிக்கப்பட்டுள்ளது. தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக்கடைவதை பிரம்மாண்டமான சிற்பமாக இங்கு வடித்துள்ளார்கள். இதைத்தவிர விஷ்ணுவிற்குப் பல சிறிய கோயில்களும் இருந்தன. அநந்த சாயி விஷ்ணு, கஜேந்திர வரதர் போன்ற சிற்பங்கள் அங்குக் கிடைத்துள்ளன. பர்மாவில், பாகன் என்ற ஊரில் ஒரு பழைய விஷ்ணு கோவிலில் முகுந்த மாலையிலிருந்து சில ச்லோகங்கள் கல்

வெட்டாகச் செதுக்கப்பட்டுள்ளன. இது ஒரு காலத்தில் மலைநாட்டைச் சார்ந்த ஒரு வியாபாரி இக்கோயிலுக்கு நன்கொடை அளித்துள்ள செய்தியைக் குறிப்பிடுகிறது.

இந்தோனேசியாவிலுள்ள ஜாவா தீவில் இந்து மதம் மிகவும் செல்வாக்குடன் இருந்தது. அங்கு ஆண்ட அரசர்கள் விஷ்ணுவின் அவதாரமாகவே கருதப்பட்டனர். விஷ்ணு பாதங்களைத் தாங்கிய சிற்பத்தில் அந்நாட்டு மன்னன் பூர்ண வர்மனின் கல்வெட்டு உள்ளது. அதில். அவன் திருவிக்கிரமனின் அவதாரம் என்றும், அவனது பாதங்களே இங்குச்செதுக்கப்பட்டுள்ளன என்றும் அக்கல்வெட்டு கூறுகிறது.

தென் கிழக்கு ஆசிய நாடுகளில் திருமாலின் ஊர்தியான கருடனுக்குத் தனி ஏற்றம் அளிக்கப்பட்டுள்ளது. தாய்லாந்தில் கருடன் முத்திரையிட்ட சின்னந்தான் அரசாங்கச் சின்னமாகும். எல்லா அரசாங்க அலுவலகங்களிலும் கருடனின் கம்பீரமான உருவம் வைக்கப்பட்டுள்ளது. அது மங்களச் சின்னமாகவும் கருதப்படுகிறது. இந்தோனேசியாவின் விமானப் பிரிவுக்கு கருடா ஏர்வேஸ் என்று பெயர்.

**இதிகாசங்களின் செல்வாக்கு :**

ராமாயணம், மகாபாரதமாகிய காவியங்கள் சம்ஸ்கிருத மொழியின் செல்வமாவன : இவை பரவாத நாடே ஆசியாவில் இல்லை என்றால் அது மிகையாகாது. யாவத்வீபம் என்னும் ஜாவாவில் பேசப்படும் கவி என்ற மொழி சம்ஸ்கிருதச் சொற்கள் அதிகமாகக் கலந்த ஒருவித மணிப்பிரவாள மொழியாக மலர்ந்துள்ளது. இம்மொழியில் எழுதப்பட்ட ராமாயணமும் மகாபாரதமும் இந்தோனேசியாவில் மிகப்பிரபலமாக வழங்கி வருகின்றன. அங்குள்ள பணதரன் என்னும் கோவிலில் ராமாயண சிற்பங்கள் உள்ளன. லாவோஸ் நாட்டில் பிரா அனிருத் என்னும் அரசன் கட்டிய கோவிலில் ராமாயண ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. தாய்லாந்து தலைநகரமான பாங்காக்கிலுள்ள பெரிய அரண்மனையில்தான் உலகிலேயே நீண்ட அளவு ராமாயண ஓவிய வரிசைகள் உள்ளன. தாய்லாந்து, இந்தோனேசியா, பாலி போன்ற நாடுகளின் தேசிய நடனங்கள் பெரும்பாலும் ராமாயண காவியத்தை மையமாகக் கொண்டே இயங்குகின்றன. நமது நாட்டு உடைகளும், கிரீடம் போன்ற அணிகலன்களும் அணிந்து அழகாக அசைந்து கைமுத்திரைகளைக் காட்டி அபிநயம் செய்கிறார்கள். ராமாயணத்தில் வரும் பாத்திரங்களுக்குத் தக்கவாறு முகமூடிகள் அணிந்து நடனமாடுகிறார்கள். கம்போடியாவில் ராயல் ராமாயண என்னும் தேசிய நடன கேந்திரத்தில் ராமாயண நடனத்தில் பயிற்சி அளிக்கிறார்கள்.

அதுபோல பாலிநாட்டில் மகாபாரதம் போன்ற புராணங்களைப் பழைய பாலி மொழியில் எழுதி அவற்றைக் கோவில்களில் படிக்கின்றார்கள். தினமும் கம்போடியாவில் (பழைய காம்போஜ தேசம்) ஒரு கோவிலில் ராமாயணம், மகாபாரதம் பாராயணம் செய்வதற்காக ஸ்ரீ சோமசர்மா என்பவர் ஒரு கட்டளை ஏற்பாடு செய்த செய்தியை ஒரு கல்வெட்டு தெரிவிக்கின்றது.

---



ஸ்ரீ. உ. வே. திருமலை அனந்தாண்பிள்ளை
ஸ்ரீனிவாஸராகவாசாரியர்



ஸ்ரீ. உ. வே. திருமழிசை வேங்கடாசாரியர்
(1969 முதல்)





ஸ்ரீ உ.. வே. T. S. ராஜகோபால ஐயங்கார்
1969 முதல். கவிரத்ந கண்டீரவ செஞ்சொற்கவி
அபிநவ பட்டர்பிரான் விருது பெற்றவர்.
ஆங்கிலம் கணிதம் வல்லுநர்.
திருக்கண்ணபுரம் ஸந்நிதியிலும் ஈடுபடுபவர்.



ஸ்ரீ. உ. வே. K. V. பாஷ்யம் ஐயங்கார் (கூரம்)
(1964 முதல் 1974) மறுபடி 1983.
கூரம் ஆழ்வான் ஸந்நிதியிலும் ஈடுபடுபவர்



ஸ்ரீ. உ. வே. P. தெய்வநாயகம் ஐயங்கார்
(1983 முதல்) (அத்யாபகம், வேதபாராயணம்)



ஸ்ரீ. உ. வே. P. சுந்தரராஜ ஐயங்கார்
(1969—1974) மறுபடி 1983





ஸ்ரீ. உ. வே. M. சடகோபாசாரியர்
(1960—1974 மறுபடி 1983)



ஸ்ரீ. உ. வே. T. S. ராமானுஜம் ஐயங்கார்
1983 முதல்



ஸ்ரீ. உ. வே. வாத்தியார் V. நம்பி ஐயங்கார்
1983 வேதபாராயணம்.



ஸ்ரீ உ. வே. T. நாராயண ஐயங்கார் (சிரோன்மணி)
1983 முதல்





ஸ்ரீ உ. வே. அஷ்டகோத்ரம் நல்லான் சக்ரவர்த்தி பார்த்தஸாரதி ஐயங்கார் 1955. 1977 முதல் தொடக்கதாரராகவும், கார்யதரிசியாகவும் செயலாற்றுபவர். மூன்று தலைமுறையாய் ஸ்ரீ உடையவர் கைங்கர்யத்தில் சேவை செய்த மஹான்களின் மரபில் வந்தவர். இங்கு ஸந்நிதியில் கெருடவாகனத்திற்குத் தங்கமுலாம் பிரபையும், பஞ்ச பருவ கேடயமும் ஸமர்ப்பித்த குடும்பத்தைச் சேர்ந்தவர். கோஷ்டிக்கு அவ்வப்போது நேரும் இடையூறுகளை அமைதியாக எதிர்கொண்டு போராடி வென்ற சாத்வீக வீரர். 1982-இல் கோஷ்டியின் சிறப்பு விழாவைத் தனிப்பட நின்று திறம்பட நடத்தியவர். இவர் ஏற்பாடு செய்த ததியாராதனை விசேடங்கள் மறக்க முடியாதவை. இந்தச் சிறப்பு விழா மலருக்கு அல்லும் பகலும் பாடுபட்டுக் கொண்டுவந்த சீரியவைணவ சிகாமணி. தேர்கடவிய பெருமான்மாட்டு ஆராத பக்தி பூண்டு தொண்டிற்கே கோலம் பூண்டு கோஷ்டிக்கு உயிர்நாடியாய் விளங்குவது மிகையாகாது.

ஸ்ரீ உ. வே. T. S. ராஜகோபால ஐயங்கார் ஸ்வாமி நூல் 'திருவல்லிக்கேணி பெருமான் பொன்னூசல்' வெளியீட்டு விழா, 1976 மாஜி நீதிபதி N. கிருஷ்ணஸ்வாமி ரெட்டியார்



ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீரங்க நாராயண ஜீயர் ஸ்வாமிக்கு வரவேற்பு (1982)






திருவல்லிக்கேணி ஸ்ரீ உடையவர் கைங்கர்ய ஸபையின் [பிங்கள வருஷத்திய] மலர் வெளியீட்டு விழாவில் மேடையில் பிரமுகர்கள்



ஸ்ரீ உ. வே காஞ்சி P. B. அணஞஸ்வாமி, முன்னாள் ஆளுனர் பிரபுதாஸ் பட்வாரி மாஜி நீதிபதி N. கிருஷ்ணஸ்வாமி ரெட்டியார்



உடையவர் கைங்கர்ய சபையில் காஞ்சி ஸ்ரீ P. B. A. ஸ்வாமி உபன்யஸிக்கிறார்



மேற்படி கூட்டத்தின் ஒரு பகுதி






முதல் பிரதியை காஞ்சி P. B. A. ஸ்வாமியிடமிருந்து ஆளுநர் பெருதல்





கனமிகு மாநில ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி
காஞ்சி ஸ்ரீ உ. வே. P. B. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி



கோஷ்டியில் 760-வது ஆண்டு விழாவில், கடைசிநாள் உபன்யாஸத்தில் காஞ்சி ஸ்ரீ P. B. A. ஸ்வாமி உபன்யஸிக்கிறார்



குழுமியிருந்த கூட்டத்தில் ஒரு பகுதி .

வீனஸ்காலனியில் நடந்த ஸ்ரீ உடையவர் கைங்கர்ய சபையில் காஞ்சி
P. B. அண்ணாஸ்வாமி



மலர் வெளியீட்டில் பிள்ளைலோகம் பாஷ்யகாரர் ஸ்வாமி





1900-இல் இயல் கோஷ்டி (கங்கை கொண்டான் மண்டபம்) (1) உ. வே. வை. மு. அப்பங்கார் ஸ்வாமி, (2) ஷஷ்டி ஜீயர் (காஞ்சி P. B. அண்ணாவின் தாதா), (3) வாத்தியார் ரங்கஸ்வாமி ஐயங்கார்.



பகுகுடும்பி வரதாசாரியர் ஸ்வாமி பகவத் விஷய காலக்ஷேப கோஷ்டி (1930)–ஸ்ரீ. உ. வே. சோளஸிம்மபுரம்ஸ்வாமி, பகுகுடும்பி வரதாசாரியர், P. B. A. ஸ்வாமி, அத்யாபகர்களில் குவளை திருமலை, குவளை அனந்தாழ்வான், P. K. ஸ்ரீராம ஐயங்கார், C. ஸ்ரீனிவாஸ வரதாசாரியர், T. A. வரதாசார்யர், M.M. பார்த்த ஸாரதி ஐயங்கார் இவர்களைக் காணலாம்.

சிறுபுலியூர் ஸ்வாமிகளுடன் அத்யாபக கோஷ்டி (1937) ஸாது ராமானுஜாசாரியர், திருவாலி ராமானுஜாசாரியர் திருவாலி ரங்கஸ்வாமி, கீழானூர் ரங்கஸ்வாமி

பூர்வாச்சிரமத்தில் ஸாது ராமானுஜாசாரியர் பகவத் விஷய காலக்ஷேப கோஷ்டி (1938) அத்யாபகர்களில் திருவாலி ராமானுஜாசாரியர், கர்ணம் திருமலாசாரியர், ஒரகடம் பார்த்தசாரதி ஐயங்கார் இவர்களைக் காணலாம் (நம்மாழ்வார் ஸந்நிதியில்).



ஸ்ரீ உ. வே. வாகம்ருதவர்ஷி வேளுக்குடி வரதாசாரியர்
சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்மாசாரியரும்





ஆழ்வார் திருநகரியில் வேளுக்குடி வரதாசாரியர் ஸ்வாமி பகவத்விஷய காலக்ஷேபகோஷ்டியில் சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்மாசாரியரும், புத்தூர் S. கிருஷ்ண ஸ்வாமி ஐயங்காரும்—



உ.வே. அஷ்ட கோத்ரம் வேங்கடாசாரியர்
(பட்டப்பா ஸ்வாமி, ஸ்ரீ பெரும்பூதூர்)

உ. வே. அஷ்டகோத்ரம் ஸ்ரீனிவாஸாசாரியர்
(ஸ்ரீரங்கம் அப்பண்ணு)





1971-இல் காரப்பங்காடு வேங்கடாசார்யர் பரமபதித்தபோது ஸந்நிதி மரியாதை—உ. வே. K. வரதாசாரியர், S. V. வரதராஜ ஐயங்கார் (தர்மகர்த்தா) K. V. அனந்தாசாரியர். மேல்கோட்டை அரையர் ஸ்வாமி.



ஸ்ரீரங்கம்
உ. வே. கோவிந்தா சாரியர் ஸ்வாமி,
1930-இல் ஸ்ரீ பாஞ்சராத்ர
ஆகம புத்தகம் வெளியிட்டவர்

திருமலை திருப்பதி இயல் கோஷ்டி
(1950)



கச்சி கிடாம்பி யாமுனாசாரியர், பரவஸ்து சினிவாஸாசாரியர் சின்னஜீயர் ஸ்வாமி, புரிசை அனந்தாசாரியர் வீரவல்லி ஸ்ரீனிவாஸவரதாசாரியர் ஸ்வாமி.

ப்ராசீன வழக்கப்படி திருவல்லிக்கேணியில் கங்கைகொண் டான் மண்டபத்திற்கு, ஸ்ரீபார்த்தஸாரதி பெருமாள் சடகோபனை ஏள்ளப்பண்ணி மரியாதை (பஞ்ச முத்திரை) ஸாதிக்கப்படும் மடாதிபதிகள் (ராஜஸன்யாஸிகள்) (1) ஸ்ரீ. வானமாமலை மடம் ஜீயர், (2) ஸ்ரீ. அஹோபில மடம் ஜீயர், (3) ஸ்ரீ. சிருங்கேரி மடம் சங்கராசாரியர்.



ஸ்ரீ. வானமாமலை மடம் ஜீயர்



ஸ்ரீ. அஹோபில மடம் ஜீயர்



ஸ்ரீ. சிருங்கேரி மடம் சங்கராசாரியர்

# கைரவிணியின் மகிமை

T. S. ராஜகோபால ஐயங்கார். B.A., L.T.
[கவிரத்ந-கண்டீரவ, செஞ்சொற் கவி, அபிநவ பட்டர்பிரான்]

வைர மினியில்லை மண்ணிற் பிறப்பில்லை
கைர விணிநங் கருத்துளதால்-பையரவில்
மந்நாதன் சிங்கன் வரதனிரா மன்கண்ணன்
இந்நா ளருள்பெய்வ ரிங்கு.

**முன்னுரை**

திருவல்லிக்கேணியின் பெருமை ப்ரஹ்மாண்ட புராணத்தில் பத்து அத்யாயங்களில் காணலாம். "ஸஹஸ்ரநாமதத் துல்யம் ராமநாம" என்று ராமநாமத்தின் பெருமையைச் சிவபிரான் பார்வதிக்குக் காட்டியதுபோல, இத்தலத்தின் பெருமையை மகேசுவரன் நாரதபகவானுக்கு விவரிக்கின்றான். முன்பு இந்தத் தலத்தில் திருத்துழாய் எங்கும் அடர்ந்திருந்ததால், இது ப்ருந்தாவனம் என்றும் துளஸிவனம் என்றும், முனிவர்களால் பாராட்டப்பட்டு வந்தது. அத்ரி, ப்ருகு, மரீசி, மார்க்கண்டேயர், மதுமான், ஆத்திரேயர் போன்ற ரிஷிகள் இதில் நெடுங்காலம் தவத்தில் தோய்ந்து சித்திபெற்றனர். க்ஷீராப்தியிலிருந்து பெரிய பிராட்டியார் ப்ருகு முனிவரின் திருமகளாக அவதரிக்க, க்ஷீராப்தி நாதன் அவளைத் திருமணஞ் செய்துகொண்டு, இங்கே மந்நாதன் என்று திருநாமமேற்றுக் சயனித்துள்ளான். சிங்கப்பிரான் தேவலோகத்திலிருந்து திவ்ய விமானத்துடன் எழுந்தருளி அத்ரி பகவானுக்குக் காட்சி அருளி இங்கேயே வீற்றிருக்கலானான். அவ்வப்போது தவத்தினருக்கு ஸேவை அருளிய பெருமான் ஸ்ரீராம பிரானாகவும், கஜேந்த்ர வரதனாகவும், பார்த்தஸாரதியாகவும் உலகினர் உய்வதற்காக இங்கே எழுந்தருளியிருப்பதால், இத்தலம் மேலும் சிறப்புற்றது.

இந்த திவ்யதேசம் கைரவிணி என்று ரிஷிகளால் பாராட்டப்பெற்றது. கைரவம் என்பது செவ்வல்லி. அதாவது ஆம்பல் வகை. இங்குள்ள தடாகத்தில் கைரவம் அடர்ந்திருந்ததுபற்றி, கைரவிணி என்ற பெயர் இதற்கு நிலவியது. தடாகம் என்பது : பொய்கை, கேணி, ஆவி, தடம்... எனவே கைரவிணி என்பது திருவல்லிக் கேணி ஆயிற்று. வாட்டாறு. சிற்றாறு ஆகிய ஆறுகளின் கரையில் அமைந்துள்ள தலங்கள் திருவாட்டாறு, திருச்சிற்றாறு; பெருங்குளம், வெள்ளக்குளம் என்ற தடாகங்களினருகில் அமைந்துள்ள தலங்கள் பெருங்குளம் (திருக்குளந்தை), திருவெள்ளக் குளம்; இதுபோல் கைரவிணிக் கரையில் இலங்கும் திவ்யதேசம் திருவல்லிக்கேணி ஆயிற்று.

**கைரவிணிபற்றிச் சிவபெருமான் கூறுவது**

கைரவிணி என்ற இந்தத் தடாகம் இயற்கை வனப்பு வாய்ந்தது என்றும் தெள்ளிய நீர் அடர்ந்துள்ளது. நீர்ப் பரப்பில் தாமரை, ஆம்பல். நீலம் படர்ந்திருக்கின்றன. தடாகம் மானஸ ஸரஸ்போல் திகழ்கின்றது.

அன்னமும் கரண்டமும் அரியச கோரமும்
இன்னன இணைவினில் எங்கணும் அடரவே
பொன்வரி வண்டினம் பொங்கரில் படிந்துமன்
இன்னிளி இசைத்திடும் இக்கயக் கரையிலே.

சந்தனம் பூழிலும் சாலமும் சண்பகம்
உந்துதே மாவொடும் ஓங்குகூ விளையொடும்
கந்தமார் கொடியினம் கனத்தடர் கரையதே
நந்தனம் போன்றதால் நாண்மலர் குலுங்கிட.

[கரண்டம் - நீர்க்காக்கை, சகோரம்– சக்கரவாகம், பொங்கர் - சோலை, இளி- இசை; பூழில் - அகில், சாலம் – தேக்கு, கூவிளை-வில்வம்.]

புனிதநீர் பொங்கும் இப்பொய்கையைக் காணும்போதே தீவினைகள் யாவும் நீங்கும். இத்தூநீரில் சிறிதளவு பருகினுலும் பெறற்கரிய பேறு பெறலாம். இப் பொய்கையிற் குடைந்தாடுபவருக்கு நரகமேயில்லை, மறு பிறவியுமில்லை.

இதில் நீராடும்போது ஓதவேண்டிய மந்திரத்தை வஸிஷ்டபகவான் பின்வருமாறு வெளியிட்டுள்ளான்:

அபஹர மம துரிதாநி ப்ரதிச த்வம்
நிருபமாம் யசோலக்ஷ்மீம் ।
பகவதி கைரவிணி! த்வாம் ப்ரணமாமி
ஜநார்தநப்ரியே! சுபகே!

[பெருமை வாய்ந்த கைரவிணியே! ஜநார்தனனது விருப்பிற்குரியவளே! சோபனையே! எனது பாவங்களைப் போக்குவாய், நிகரற்ற கீர்த்திச் செல்வம் அளிப்பாய்].

இப் பொய்கையின் பேரெழிலைக் கண்டுகளிப்பவரும், இதன் தெள்ளிய நீரைச் சிறிது கரத்திலேந்திப் பருகுபவரும், இதன் கரையில் வாழ்ந்துகொண்டு, "இதுவன்றோ வாழ்க்கை!" என்று உகப்பவரும் பெருமானது திருவடியில் சேர்ந்து என்றுங் களிப்புறுவர்.

இப்பொய்கைக் கரையின்பால் என்று மோங்கும்
எழில்தன்னைக் கண்டுள்ளம் களிப்பார் தாமும்
இப்புனலில் சிறிதேனுங் கரத்தி லேந்தி
இறைவன்தன் பேரோதிப் பருகு வாரும்
இப்புனலில் அலையெறியுங் கரையில் தோய்ந்து
இதுவன்றோ வாழ்வென்றே வாழ்வார் தாமும்
தப்பரிய பவம்நீங்கி மரையாள் தோயும்
தடமார்வன் தன்கழல்பால் படிவர் தாமே.

தீர்த்தங்கள் :

கைரவிணியின் கரையிலுள்ள தீர்த்தங்கள் யாவை என்றும், அவற்றில் நீராடிச் செய்யக்கூடிய தானம் யாது என்றும் பரமசிவன் நாரத பகவானுக்கு விரித்து அருளினுன்.

இந்தத் தீர்த்தங்கள் கைரவிணியிலேயே உள்ளன என்பது பெரியோர்களுடைய கருத்து.

வடகிழக்கில் ஐந்திர தீர்த்தம்: இதில் நீராடிப் புத்திரப்பேறு பெறலாம்; பெருமானது உகப்பிற்காகச் செய்யக்கூடிய தானம், சிறந்த குதிரை. தெற்கில் உள்ளது. சோம தீர்த்தம்; இதில் நீராடிச் செய்யக்கூடிய தானம்: தயிர், வெண்ணெய், ஆடைகள். தென்மேற்கில் மீன தீர்த்தம்; இதில் நீராடிச் செய்யக்கூடிய தானம்: முத்து, பவளம், தேன். வடமேற்கில் அக்நி தீர்த்தம், இதில் நீராடினுல் திடமான வாழ்வு பெறலாம், தேடரிய புகழும் சேரும். வடக்கில் விஷ்ணு தீர்த்தம் இதில் நீராடினுல் எத்தகைய தீவினையும் சூரியனைக் கண்ட பனிபோல் உருமாய்ந்து விடும்.

விசுவாவசுபெற்ற நலம்

விசுவாவசு என்ற கந்தருவன் ஒருநாள் ஆகாய மார்க்கமாகத் தெற்கில் சென்று கொண்டிருந்தான். விந்திய மலையின் தென்பாகத்தில் ஒரு பொய்கைக் கரையில் தவஞ் செய்துகொண்டிருந்த துர்வாஸ முனிவன் மேல் அவனது நிழல் பட்டது. முனிவன் சீறி, "உடலிலி ஆவாய்" என்று சபித்தான்.

சீறித் தீவிழித்துச் செப்பும் தவமுனிவன்,
'தேறில் இதுசெய்யாய்[செருக்கில் கந்தருவா!
பாரில் படிந்தவெனைப் பாராது படர்ந்தனையால்
மாறி உடலிலியாய் விழுவாய் மண்மிசையே,"

